சுற்றுப்புறத்தை உணர முடியாத மரத்தின் தன்மையி லிருந்து மனிதனை வேறுபடுத்திச் சிறப்பாக்கிக் காட்டுவது எதுவோ அதுதான் கண்ணோட்டம். உயர்ந்த மனப் பக்குவம் உள்ளவர்கள் பயிர்பச்சைகள் வாடுவதைக் கண்டு கூட மனம் நொந்து நிற்பார்கள். 'வாடிய பயிரைக் கண்ட போதெல்லாம் வாடினேன்' என்று வடலூர் இராமலிங்க அடிகள் அந்த உயர்ந்த நிலையை வெளியிடுகிறார். ஆனால் இன்றைய நகரங்களின் அவசர வாழ்க்கையில் சுற்றி வாழ்கிறவர்கள் வாடியிருப்பதைக் கண்டும்கூடப் பதிலுக்கு வாடத் தெரியாமல் ஓடிக் கொண்டிருக்கிறோம் நாம். சந்தர்ப்பங் களின் வற்புறுத்தலாலும் பிழைக்க வேண்டிய வாழ்க்கை அவசரத்தாலும் வேகமாக வாழ்கிறோம். வேகமாக வாழ லாம். ஆனால் மனிதத் தன்மையற்று வாழக் கூடாது எந்த எந்த இடத்தில் நடந்து போய்க் கொண்டிருக்கிறோமோ அந்தப் பாதையைப் பார்க்காமல் நடக்க முடியாததுபோல் எந்தச் சூழ்நிலையில் இருக்கிறோமோ அந்தச் சூழ்நிலையின் சுகதுக்கங்களிலிருந்து நம்மைப் பிரித்துக்கொண்டு தனியாக நாம் மட்டும் மகிழக்கூடாது. அப்படி மகிழும் மகிழ்ச்சி நியாயமானதாக இருக்க முடியாது. சுற்றுப்புறத்தோடு படர்ந்து கொடியைப்போல் எல்லாக் கிளையிலும் மலர்ந்த படி வாழவேண்டும். கண்ணோட்டம் நிறைந்த வாழ்க்கை என்பது இதுதான். அநுதாபத்தைக் கூட உறவினர்கள் மேலும், தங்களுக்குப் பயன் படுகிறவர்கள் மேலும் செலுத்துகிற காரணக் கருணை சான்றோர்களால் மதிக்கப்பட மாட்டாது. தெரிந்தவர்களோ, தெரியாதவர்களோ கலந்து பழகிப் பேசி அல்லது கண்டு உணர்ந்து புரிந்து கொண்டு சுற்றுப்புறத்தோடு ஈடுபட்டு வாழவேண்டும்.

சின்னஞ் சிறு கிராமங்களிலும் ஆடம்பரங்கள் நுழை யாத சிறிய ஊர்களிலும் சுற்றுப்புற உணர்ச்சி இயல்பாகவே அமைந்திருக்கும். அகன்ற தெருக்களும் பெரிய வீடுகளும் ஜாலி மயமான வாழ்க்கையும் உள்ள நகரங்களிலோ பக்கத் தில் குடியிருப்பவர்களுடைய ஊர் பேர் தெரியாமலே ஒவ் வொரு குடும்பமும் தன் சுகத்திலும், நலத்திலும் மூழ்கி

வாழும். ஒரு வீட்டின் சுக துக்கங்கள் இன்னொரு வீட்டைச் சிறிதளவும் பாதிக்காது. அவ்வளவு ஏன்? ஒரு வீட்டின் சுக துக்கங்கள் இன்னொரு வீட்டுக்குத் தெரியக்கூட வழியின்றி வீடுகள் ஒவ்வொன்றும் நெருங்கியிருந்தும் உறவுகளும், உணர்வுகளும் பிரிக்கப்பட்டிருக்கும். நகர வாழ்க்கையின் புதுமைகளிலும் நாகரிகத்திலும், இப்படி உறவுகளாலும் பிரிந்து போயிருப்பது குறையாகப் படவில்லையானாலும் சுற்றுப்புற உணர்ச்சியற்றுத் தனித் தனிச் சுகங்களில் மூழ்கி வாழ்வது சரியில்லைதான். இப்படி நெருங்கி வசித்தபடியே பிரிந்து வாழ்கிற பட்டினத்து நாகரிகக் குறைபாடு என்றாவது ஒரு நாள் மாறித்தான் ஆகவேண்டும். இயல்பாகவோ, படிப் படியாகவோ அந்த மாறுதல் நிகழும் காலத்தை எதிர் பார்த்து நம்புவோமாக.

## பொதுக்கூட்டங்கள்

பொதுக் கூட்டங்களும், சொற்பொழிவுகளும், இப் போது ஏராளமாக நடக்கிற வேகத்தைப் பார்த்தால் எதிர் காலத்திலே வேறொரு விநோதமான சூழ்நிலை ஏற்பட்டு விடுமோ என்று கூடப் பயப்படுவதற்கு இடமிருக்கிறது.

பேச்சைக் கேட்கிறவர்கள் பலராகவும், நிகழ்த்துகிறவர்கள் சிலராகவுமுள்ள இன்றைய சூழ்நிலை மாறி உலகத்தில் பிரசங்கம் செய்கிறவர்கள் மட்டுமே பெருகி: பிரசங்கம் கேட்கிறவர்கள் எல்லோருமே அலுத்துப்போய்விட்டால் என்ன ஆகும் என்று வேடிக்கையாக ஆராய்ந்து பார்க்கலாமே!

இன்னார் இறை வணக்கம் பாடுவார், இன்னார் தலைமை வகிப்பார், இன்னார் சொற்பொழிவாற்றுவார் என்று இப் போது நிகழ்ச்சி நிரல் அச்சிடுகிறாற் போல எதிர்காலத்தில் இன்னின்னார் மட்டும் கடைசி வரைஇருந்து சொற்பொழிவு கேட்பதற்கு இசைந்துள்ளார்கள்—என்று வேறு விதமாக நிகழ்ச்சி நிரல் அச்சிடுவதற்கும் நேரலாம். கேட்டு அநுபவிக்

கிறவர்கள் அதிகமாகவும், பேசுகிறவர்கள் குறைவாகவும் இருந்த காலத்தில் பேச்சாளர் பெயரை மட்டும் நிகழ்ச்சி நிரலில் அச்சிட்டது பொருத்தமாயிருந்தது. கேட்கிறவர்கள் அல்லது கேட்கத் தயாராயிருக்கிறவர்கள், மிகமிகக் குறை வாகிப் போய்ப் பேசுகிறவர்கள் தொகை அதிகமாகிவிடும் காலத்தில் நிகழ்ச்சி நிரலிலே கேட்கிறவர்கள் பெயரை மட்டும் அச்சிடுவதுதான் பொருத்த மாயிருக்கும். இப்போது இருக்கிற சூழ்நிலையைப் பார்த்தால் அப்படியும் ஒரு காலம் வரும் போலத்தான் தோன்றுகிறது. தினசரிப் பத்திரிகை க்ளில் ஏதாவது ஒரு பக்கத்தில் ஏதாவது ஒரு மூலையில் 'இன்றைய சொற்பொழிவு நிகழ்ச்சிகள்' என்று சிறிய எழுத் துக்களில் மங்கலாக அச்சிடுவதற்குப் பதில் இன்றைய சொற் பொழிவு நிகழ்ச்சிகளை மட்டும் அச்சிட்டாலும் அதுவே ஒரு முழுப்பத்திரிகையை நிரப்பிவிடும் என்பது போல் இருக் கிறது சூழ்நிலை. அவ்வளவு அதிகமான கூட்டங்கள் நாள் தோறும் நடைபெறுகின்றன.

குதிரைப் பந்தயத்துக்கு 'ரேஸ் டிப்ஸ்' வெளியீடுகள் மாதிரி சொற்பொழிவுகளுக்கும் தனித்தனி வெளியீடுகள் வரலாம். 'இன்ன குதிரை வெற்றிபெறும், இன்ன குதிரை வெற்றிபெருது என்று பந்தய முடிவுகளைப் பற்றி ஹேஷ்யம் கூறுவதைப் போல இன்றைய தினம் பேச்சில் இன்னுர் வெற்றி பெறுவர்—இன்னுர் வெற்றிபெற மாட்டார் - என்று சொற்பொழிவுக் குதிரைகளுக்கு (வேகமாகப் பேசும் ஆவே சப் பேச்சாளர்களுக்கு இந்தப் பெயர் மிகமிகப் பொருந்தும்) ஹேஷ்யம் கூறும் வெளியீடுகளும் வரலாம்.

## கூட்டம் பலவிதம்

இந்த நாட்களில் பொதுக்கூட்டங்கள் பலவகையாக நடைபெறுகின்றன. இலக்கியக் கூட்டம், அரசியல் கூட்டம், பாராட்டுக் கூட்டம், கண்டனக் கூட்டம், அநுதாபக் கூட்டம் என்று பேர்கள் தாம் வேறு வேருக இருக்கின்றன. எல்லாக் கூட்டத்துக்கும் பேசுபவர்கள் உண்டு என்பது மட்டும் சர்வ நிச்சயம். கேட்பவர்கள்?...இந்த இரண்டாவது தேவையைப்

பற்றி மட்டும் நிச்சயம் சொல்ல முடியாது. ஏனென்றால் பேசுகிறவர்களை விடக் கேட்கிறவர்களுக்குச் சுதந்திரம் அதிகம். பேசுகிறவர்கள் கூட்டத்துக்குக் கண்டிப்பாக வந்துதான் ஆக வேண்டும். கேட்கிறவர்கள் அப்படி இல்லை. ஒரு கூட்டத்துக்கு ஆர்வத்தோடு வந்து கேட்பதில் அவர்களுக்கு எத்தனை சுதந்திரம் உண்டோ, அத்தனை சுதந்திரம் வந்து கேட்காமல் புறக்கணித்து விடுவதிலும் உண்டு. மேடைச் சொற்பொழிவு என்பது கடைவீதியைப் போன்றது. எல்லாக் கடைக் காரர்களும் தங்களிடமுள்ள பொருள்களை விற்பதற்குத் தயாராகத்தான் இருப்பார்கள். ஆனால் எந்தக் கடையில் எதை வாங்கலாம் என்பது வாங்குகிறவர்களைப் பொறுத்ததுதான். பிரசங்கம் கேட்கிறவர்கள் எல்லாரும் வாங்குகிறவர்களைப் போன்றவர்கள்.

கூட்டத்திலமர்ந்து கேட்பவர்களின் பக்குவ மறிந்து பேசி அவர்களை மகிழ்விக்கிற பேச்சாளன் எந்த இடத்தில் பூத்தாலும் அந்த இடத்தைச் சூழ மணந்து கொண்டிருக்கிற உயர்ந்த சாதிப் பூவைப் போன்றவன். மேடையில் நின்ற படியே மலர மலரப் பார்த்த வண்ணம் கூட்டத்தைக் கவர்ந்து கொண்டு பேசுகிற பேச்சாளனின் பேச்சு கேட்கிறவர்களின் வாயைக் கட்டி அடக்கி விடும் உயர்ந்த சங்கீதத்தைப் போன்றது. இப்படிப் பேசும் சக்தி வாய்ந்தவர்கள் எவ்வளவு நேரம் பேசினாலும் கேட்பவர்களுக்கு நேரமே தெரியாது. அப்போதுதான் பேசுவதற்குத் தொடங்கினாற் போன்று அந்தப் பேச்சில் ஒரு கவர்ச்சி முடிவின்றி நிலைத்திருக்கும்.

ஒவ்வொரு கூட்டத்துக்கும் ஒவ்வொரு விதமான சூழ்நிலை உண்டு. அநுதாபக் கூட்டங்களில் தலைமை வகிப்பவர் முதல் பேச்சாளர்கள் வரையில் எவரும் மறந்தும்கூட நகைச் சுவையைப் பயன்படுத்தக் கூடாது. கண்டனக் கூட்டங்களுக்கு ஒருவிதமான கடுமைத் தன்மை வேண்டும். அநுதாபக் கூட்டம், பாராட்டுக் கூட்டம் இரண்டிலுமே மொத்தத்தில் புகழுரைகள் தாம் அதிகமாயிருக்கும். ஆனால் ஒரே ஒரு வேறுபாடு உண்டு. அநுதாபக் கூட்டத்துப்

புகழுரைகளில் நகைச்சுவை கலவாது. பாராட்டுக் கூட்டத்துப் புகழுரைகளில் நகைச்சுவையும் கலந்து பேசப்படும். கண்டனக் கூட்டத்திலும் குத்தலான நகைச்சுவை இடம் பெற வழியுண்டு. அரசியல் கூட்டங்களுக்கும் புள்ளி விவரங்களுக்கும் தொடர்பு அதிகம். இலக்கியக் கூட்டங்களுக்கும் மேற்கோள்களுக்கும் நெருக்கம் மிகுதி. கதா காலட்சேபக் கூட்டங்களுக்கு உபகதைகள் உயிர்நாடி போன்றவை. சமையலுக்கு அவசியமாகத் தேவையான உப்பு, அளவுக்கு அதிகமாகி விட்டால் அதுவே சமையலைக் கெடுத்துப் பாழாக்கி விடுவதைப் போலச் சொல்லும் கதையை விஞ்சிக் காடுமண்டிணுற் போன்ற அதிக உபகதைகள் முக்கிய நோக்கத்தின் சுவையைக் குறைத்தும் விடலாம்.

## பேச்சுக் குழப்பம்

சில கூட்டங்களில் பேச்சாளர்களைச் சகித்துக் கொள்ள முடியாமல் கேட்பவர்கள் குழப்பம் விளைவிப்பதைப்போல் கேட்பவர்கள் புரிந்து கொள்ள வழியின்றிப் பேச்சாளர்களே குழப்பம் விளைவிப்பதும் உண்டு. ஒன்றரை மணி நேரத்துக்குள் நடத்தி முடிக்க வேண்டிய ஒரு கூட்டத்தில் 'வரவேற்புரை' கூற வேண்டியவரே முக்கால் மணி நேரத்தை வீணுக்கி விட்டால் தலைமையுரை சொற்பொழிவுகள், நன்றியுரை எல்லாவற்றையும் திட்டமாகச் செய்வதற்கு நேரம் இல்லாமல் போய்விடும். 'வரவேற்புரை' கூறுகிறவர் தம் நீண்ட வரவேற்புரையைக் கூறி முடிப்பதற்குள் தலைவர் தமக்கு அணியப்பட்ட முழு நீள ரோஜாப்பூ மாலையை ஒவ்வோர் இதழாக மென்று தின்று விடலாம் போல் அவ்வளவு நேரம் செலவழியும். வரவேற்புரை கூறிக் கொண்டிருக்கும் போதே திரும்பிப் போய்விடலாம் போலக் கூட்டத்தினரை அலுக்கச் செய்து விடுவார்கள் சில 'வரவேற்பு' (இப்படிப்பட்ட வரவேற்பு உரையாளர்கள் பேசப் பேசக் கூட்டத்தினருக்கு வேர்த்துக் கொட்டுமாதலால் இவர்கள் செய்வதை 'வர வேர்ப்பு' என்றே கூறி விடலாம்!) உரையாளர்கள். இதே அலுப்பை நன்றி கூறலை நீட்டி முழக்கும் சிலரும்

செய்ய முடியும். நன்றியை அதிகமான வார்த்தைகளால் புகழ்ந்து சொல்வதே அதன் கௌரவத்தைக் குறைப்பதாகும் என்று உணர வேண்டாமோ?

எனக்குத் தெரிந்த ஒரு நிகழ்ச்சியை இங்கே சொல்ல எண்ணுகிறேன். நல்ல தை மாதத்து வெள்ளிக்கிழமை நாளில் மாதர் சங்கக் கூட்டம் ஒன்றில் பேசுவதற்கு ஒரு பேராசிரியரை அழைத்திருந்தார்கள். பேச்சைக் கேட்பதற்குக் கூடியிருந்த அத்தனை பேரும் சுமங்கலிகள். பேராசிரியரோ கொஞ்சம் அசடு. ''சகோதரிகளே! திலகமிழந்து திருமாங்கல்யமுமின்றி மூளிக் கைகளோடு பிச்சைக்கு வரும் அநாதைப் பெண்களைப் பார்க்க நேரும்போது எல்லாம் எனக்கு உங்கள் சங்கத்தின் பணிகள் நினைவுக்கு வரும். நமது நாட்டில் ஒரு காலத்தில் பெண்மைக்கு எவ்வளவு பெருமை இருந்தது?'' என்று பேச்சைத் தொடங்கியபோதே ''சிவ, சிவா! தை வெள்ளிக்கிழமையும் அதுவுமாக விளக்கேற்றுகிற நேரத்தில் இந்த அமங்கலமான பேச்சைக் கேட்பதற்காகவா நாம் இங்கே வந்தோம்?'' என்று கூடியிருப்பவர்கள் கூசும்படி எவ்விதமாகவோ பேச்சைத் தொடங்கினார் அவர். இப்படிச் சந்தர்ப்பத்துக்கும் இடத்துக்கும் பொருந்தாமல் தொடங்கப் படுகிற பேச்சு—வெறுக்கப்படும். நல்ல ஆரம்பம்—கணீரென்று எடுப்பு—இவை ஒரு சிறந்த சொற்பொழிவுக்கு முதலில் வேண்டிய அடையாளங்கள்.

கூட்டத்தில் தான் பேசவேண்டிய பொருளைப்பற்றி முழுவதும் மறந்து போய்விட்டுத் தனக்கு முன் பேசியவர் தம் பேச்சில் விட்டுப் போயிருந்த பிரச்னைகளை எடுத்துக் கிண்டிக் கிளறி அலுத்துக் கொள்கிற பேச்சாளர்களும் உண்டு. மேலே கூறிய மாதர் சங்கத்தில் அந்தப் பேராசிரியர் தை வெள்ளிக்கிழமையும் அதுவுமாக இப்படிப் பேசிய நிகழ்ச்சிக்குப் பின் அச்சங்கத்தில் ஆண் பிள்ளைகளையே பேசக் கூப்பிடுவதில்லை என்று தீர்மானம் செய்து விட்டார்கள். பின் வேறென்ன செய்வார்கள்?

## தடுமாறும் சொற்கள்

பொதுக்கூட்டங்களில் பேசும்போது சில கற்றுக்குட்டிப் பேச்சாளர்கள் என்ன சொல்லைச் சொல்லுகிறோம் என்பதை உணராமல் தடுமாறிப் போய்ப் பேசுவதுண்டு.

'இத்துடன் நான் பேச எடுத்துக் கொண்ட காலம் முடிந்து விட்டதனால் என் பேச்சை முடித்துக் கொள்கிறேன்' என்று சொல்லவேண்டிய இடத்தில், 'இத்துடன் என் காலம் முடிந்து விட்டதனால் சொற்பொழிவை முடித்துக் கொள் கிறேன்' என்று சொல்லிக் கூட்டத்தைத் திணற அடித்தார் ஓர் இளைஞர். 'இன் மை லாஸ்ட் டேய்ஸ்' என்று பதவி விலகிப்போகும் ஒருவர் ஆங்கிலத்தில் தொடங்கிய பேச்சை அருகிலிருந்த மொழி பெயர்ப்பாளர், 'எனது இந்த அந்திம நாட்களில்' என்று மொழிபெயர்த்துப் பேசியவர் ஏதோ மரணப் படுக்கையிலிருந்து கொண்டு பேசுவதைப் போன்ற களையை உண்டாக்கினார்.

இன்னொரு கூட்டத்தில் ஊரெல்லாம், இப்படிப் பிரஸ் தாபமாக இருக்கிறது என்பதைச் சொல்ல வந்த பேச்சாளர் ஒருவர் வாய் குழறி, 'ஊரெல்லாம் இப்படிப் பிரசவமாக இருக்கிறது' என்று சொல்லிக் கூட்டத்தில் இருந்தவர்கள் 'கொல்'லென்று சிரிக்கும்படி செய்தார் இன்னும் இப்படி எத்தனை எத்தனையோ தடுமாற்றங்கள் நிகழ்வதுண்டு. ஒருவர் காலஞ்சென்றதை யொட்டி நடைபெற்ற அநுதாபக் கூட்டம் ஒன்றில் இப்படி ஒரு குழப்பத்தைப் பேச்சாளர் ஒருவர் உண்டாக்கினார். அந்தப் பாழாய்ப்போன பேச்சாளருக்குக் காலஞ்சென்றுவிட்ட பிரமுகரின் பெய ரைக் காட்டிலும் அவருக்காகக் கூட்டிய அநுதாபக் கூட்டத் துக்குத் தலைமை வகித்துக்கொண்டிருந்த பிரமுகரின் பெயர் தான் நன்றாக நினைவு இருந்தது. எனவே குறிப்பிட்ட பேச்சாளர் பேசும்போது, 'இன்றைக்குக் காலம் சென்ற ......' என்று தொடங்கி உயிரோடு குத்துக் கல்லாய் நாற் காலியில் வீற்றிருந்த தலைவரின் பெயரைச் சொல்லி விட்டார். அந்தப் பேச்சாளர் இப்படி வாய் குழறி இரண்டு

மூன்று முறைகள் சொல்லிய பின்பே கூட்டத்தில் சிலர் சிரித்தும், சிலர் முகத்தைச் சுளித்தும் ஆரவாரப்படுத்திப் பேச்சாளரை எச்சரித்து அவருக்குத் தன் நினைவு வரச் செய்தார்கள்.

வேறு சில பேச்சாளர்கள் ஏதோ ஓர் அர்த்தத்தில் நினைத்து ஏதோ ஓர் அர்த்தத்தில் வாக்கியத்தைக் குழப்பிப் பேசி விடுவார்கள்.

'பயனில சொல்லாமை என்பது ஒரு குற்றம் என்று திருவள்ளுவர் கூறியிருப்பது உங்களுக்கெல்லாம் தெரியும்' என்று ஒருவர் கூட்டத்துப் பேச்சின் அவசரத்தில் சொல்லும் வாக்கியமானது ஒழுங்கான அர்த்தத்தில், அமைய வேண்டு மானல் 'பயனில சொல்லுதல் என்பது ஒரு குற்றம் என்று திருவள்ளுவர் கூறியிருப்பது உங்களுக்கெல்லாம் தெரியும்' என்று இருக்கவேண்டும். உற்று உணர்ந்தால்தான் இந்தப் பிழைகள் எல்லாம் தெரியும்.

## எப்பொழுது முடியும்?

குறிப்பிட்ட நேரத்துக்குக் கூட்டம் தொடங்கப் பெருத பட்சத்தில் 'அது எப்போது தொடங்கும்' என்று பேச்சுக் கேட்க வந்தவர்கள் காத்திருப்பார்கள். ஒவ்வொரு பேச்சாளராய்த் தத்தம் கருத்துக்களைக் கேட்பவருடைய மண்டையில் கனக்கச் செய்தபின் 'கூட்டம் எப்போது முடியும்?' என்று எல்லார் மனத்திலும் ஆவல் எழும். இந்த இரண்டு கேள்விகளில் முதலாவது கேள்வி ஒரு கூட்டத்தின் நுனி. இரண்டாவது கேள்வி ஒரு கூட்டத்தின் மறுநுனி. நாகரிகமடைந்துவிட்ட புதிய சமுதாயத்தின் அன்றாட நிகழ்ச்சிகளில் பொதுக் கூட்டங்களும், சொற்பொழிவுகளும் கூட முக்கியமானவையாகி விட்டன. சொற்பொழிவாளர் கள் என்ன பேசப் போகிருர்கள் என்பதைக் கேட்க நேர மின்றி அடுத்த கூட்டத்துக்குப் பறந்து கொண்டு ஓடும் அவசரத் தலைவர்கள், தலைவர் உரையை முழுவதும் கேட்கிற அளவுக்கு முன் கூட்டியே வர முடியாமல் தாம் பேசவேண்

டிய நேரத்துக்கு மட்டுமே ஓடி வர முடிந்த அவசரச் சொற்பொழிவாளர்கள்.

பொதுக்கூட்டங்களில் உறுதியான நற்பலன் கூட்டங்களை ஏற்பாடு செய்கிறவர்கள் தலைவருக்கும் பேச்சாளருக்கும் அணிவது மாலையாகத்தான் இருக்கும் என்பது. உறுதி சொல்ல முடியாத பலன் கூட்டத்தில் இருந்து கேட்பவர்கள் என்ன தருவார்கள் என்பது. கைதட்டல் (தொடர வேணும் என்ற அர்த்தத்திலும் இருக்கலாம்—முடிக்க வேணும் என்ற அர்த்தத்திலும் இருக்கலாம்) கல் தட்டல், விசில், ஆய், ஊய், எது வேண்டுமானாலும் கேட்பவர்களிடமிருந்து பேசுகிறவனுக்குக் கிடைக்கலாம். பேசுவதற்குச் சாமர்த்தியம் இல்லை என்றாலும் கேட்கிறவர்கள் தன்னை என்ன செய்யச் சொல்லிக் கையைத் தட்டுகிறார்கள் என்பதைப் புரிந்து கொள்வதற்காகவாவது ஒரு பேச்சாளனுக்குச் சாமர்த்தியம் வேணும். கைதட்டலின் தொனி நோக்கி அந்த அர்த்தத்தைப் புரிந்து கொள்ளலாம். சிலர் ஆரம்பித்த பேச்சை எப்போது முடிப்பது என்று தெரியாமல் வளர்த்துக் கொண்டே தவித்தும், கேட்பவர்களைத் தவிக்கச் செய்தும் வேதனைப்படுவதுபோல் மற்றும் சிலர் ஆரம்பித்து விட்ட பேச்சை எப்படி முடிப்பது என்று தெரியாமல் வளர்த்துக் கொண்டே முடிவு தெரிகிறவரை தடுமாறிப் பேச்சைக் குழப்பிக் கொண்டிருப்பார்கள். சிலர் கூட்டம் முடிகிற சமயத்தில் நன்றியுரை கூறுகிறபோது இப்படி முடிக்கத் தெரியாமல் தவித்துத் தவித்து நன்றியைக் கூறிக் கொண்டே இருப்பதுண்டு. சிக்கல் விழுந்துவிட்ட நூல் கற்றையைப்போல் மறு நுனி தெரியாமல் வழவழவென்று போய்க் கொண்டே இருக்கும் இந்தப் பேச்சு. இப்படி 'முடிவில்லாத' நன்றியை இந்த மனித ஆசாபாசங்கள் நிறைந்த உலகில் அடைவது அரிதென்றாலும்—அது பொருத்தமான இடத்தில் முடியுமென்று தெரிந்தால் அப்படிக் கச்சிதமாக முடிக்கிற நன்றியுரைக்கு நாம் நூறு தரம் நன்றி கூறலாம்.

தத்துவ ரீதியாகச் சொன்னால் இந்த உலகமேகூட ஒரு

பெரிய பொதுக் கூட்டம்தான். விதி என்ற மேடையில் இன்பமும், துன்பமும் மாறி மாறிப் பேசுகிற நிகழ்ச்சி நிரலை யார் அமைத்தார்களோ; தெரியவில்லை. சுகதுக்கப் பேச்சாளர்கள் மாறி மாறிப் பேசும் இந்த உலகப் பொதுக் கூட்டத்தில் ஒவ்வொருவரும் பேச்சாளர்தான். இன்னும் நன்கு கூறினால் ஒவ்வொருவரும் கூடக் கேட்பவர்தான். சுகமோ, துக்கமோ, கூடப்பேசுவது குறையப் பேசுவது தான் அவரவர் பாக்கியத்தைப் பொறுத்த விஷயம்.

# திரைப்படச் சுகங்கள்

விழிப்பில்லாத போது காண்கிற சொப்பனங்களைக் கனவுகள் என்று மன்னிக்கலாம். ஆனால் விழித்துக் கொண்டே காண்கிற சொப்பனங்களும் உள்ளன. உழைப் பிலும், அநுபவப்பட்டு முன்னுக்கு வரவேண்டும் என்பதி லும் நம்பிக்கை குன்றி எந்தவிதத்திலோ மிகக் குறுகின காலத்தில் சொகுசான வாழ்க்கையை அடைய வேண்டும் என்ற ஆசை இப்போது இளைஞர்களிடையே பெருகி வரு கிறது. சொகுசான வாழ்க்கையை அடைய வேண்டும் என்று ஆசைப்பட எல்லோருக்கும் உரிமை உண்டுதான். ஆனால் நம்பிக்கையும், நாணயமான உழைப்பில் ஆர்வமும் குன்றிச் சொகுசான வாழ்க்கைக்கு மட்டும் ஆசைப்படுவது சமுதாயத்தின் நியாயமான பலத்தை நாளுக்கு நாள் நலிந்து போகும்படி செய்துவிடும் என்பதைப் புரிந்துகொள்ள வேண்டும்.

இந்த நாட்களில் பள்ளிக் கூடங்களிலும் கல்லூரிகளி லும் படிக்கிற இளைஞர்களில் பெரும்பாலோர் சினிமாவில் வருகிற போன்ற கற்பனைச் சுகவாழ்வுக்கும், கற்பனைக் காதல்களுக்கும் அளவற்று ஆசைப்படுகிறார்கள் என்பதைப் புரிந்து கொண்டால் நாளைக்கு உருவாக வேண்டிய சமுதாயத்தைப் பற்றி நமக்குப் பயமாயிருக்கிறது.

''ஒப்பில்லாத சமுதாயம்
உலகத்துக்கொரு புதுமை''

என்று பாரதி வாழ்த்தி மகிழ்ந்த பாரத சமுதாயம் அதன் திடமான பெருமையிலிருந்து இனி என்றும் குன்றிப் போய் விடக் கூடாது என்பதில் இந்த விசால பாரதத்தின் குடி மகன் ஒவ்வொருவனுக்கும் கவலையும் அக்கறையும் வேண்டும். பலமான உழைப்பின் பேரில் கட்டி முடிக்க வேண்டிய சமுதாய நன்மைகளைச் சொப்பனம் காண்பதைப் போன்ற தனித்தனி மனிதர்களின் சில்லறைச் சுகங்களால் பலவீனப்படுமாறு செய்துவிடக் கூடாது.

நாடக மேடைகளிலும், திரைப்பட அரங்குகளிலும் நாம் காண்கிற கதை வாழ்க்கை மூன்று அல்லது நான்கு மணி நேர எல்லைக்குள் முடிந்து விடக் கூடியது. அதில் வருகிற கதாபாத்திரங்கள் படுகிற சுகதுக்கங்களுக்கு அந்த மூன்று நான்கு மணி நேரம்தான் கால எல்லை. வாழ்க்கையும் அதே போல வேகமாகவோ, பரபரவென்றோ வளரவும் நிறையவும், வேண்டுமென்று ஆசைப்படுவது சிறுபிள்ளை மனப்பான்மை. திரைப்படங்களிலும், நாடகங்களிலும், முன்பாதிக் கதையில் துன்புற்ற கதாநாயகன் பின்பாதிக் கதையில் மடமடவென்று செல்வச் செழிப்புப் பெற்று விடுவதைக் காட்டுகிறார்கள். பார்த்துக் கொண்டிருக்கும் அவையினரை இந்த நடிப்புச் சுகமும் நடிப்பு வளர்ச்சியும் மயக்குகின்றன. சொந்த வாழ்க்கையில் அவ்வளவு வேகமாகச் சுகங்களை அடைய முடியாமல் தவிக்கின்ற பலரை இந்த வேகமான கற்பனைச் சுகம் கவர்ந்து மயக்குகிறது.

## நடைமுறை உலகம்

மயக்கம் என்ற சொல்லுக்கு 'ஒரு பொருளை எப்படி உணர வேண்டுமோ அப்படி உணராமல் பிறழ உணர்தல்'— என்று பொருள். திரைப்படக் கதையில் வருகிற சுகங்களைச் சொந்த வாழ்வுக்கும் ஆசைப்பட்டு ஏங்குவது இப்படிப் பிறழ உணர்வதுதான். நடைமுறை உலகில் சுகங்கள் கட்டி

வைத்திருக்கும் மாடிப் படியில் காலுள்ளவன் ஏறுவதுபோல் அத்தனை இயல்பாக இல்லை. சுகங்களை நாடி நடக்கும்போது நாம் நொண்டி நொண்டி நடப்பதை ஒவ்வொரு விநாடியும் நன்றாக உணர்கிறோம். யதார்த்த நிலையை முற்றிலும் மறக்கச் செய்கிற கவர்ச்சி எந்தக் கலையில் இருந்தாலும் (அந்தக் கலையின் இயல்புக்கு அது பொருத்தமாய்த் தோன்றினாலும்) அது சமூகத்துக்கு நீடித்த நலனைத் தராது. நடைமுறை உலகத்துக்குப் பயன் தரக்கூடிய நம்பிக்கைகளையும், உழைப்பையும் மறக்கச் செய்கிற எந்தக் கலையும் அபினியைப் போன்றதுதான். பரிசுத்தமான கலைகள் என்பவை தேசத்தின் நிரந்தரமான புகழைத் தாங்கும் தூண்களைப் போன்றவை. தூண்கள் தளர்ந்து போய்க் கட்டையை முட்டுக் கொடுப்பது போன்ற பலவீனமான புகழ்ச்சிகள் புராதனமானதொரு தேசத்துக்குக் குறைவு தருவனவே.

எடுத்துக் காட்டாக ஒன்றிரண்டு நிகழ்ச்சிகளைப் பார்க்கலாம். ஒரு மில் முதலாளியின் மகள் தன்னுடனே கல்லூரியில் படிக்கும் மத்தியதரக் குடும்பத்து இளைஞன் ஒருவனை மணக்க விரும்புவதாக இடைவேளை வரை ஓடுகிற திரைக்கதை—இடைவேளைக்குப் பிறகு திடீரென்று நிகழ்ச்சிகளால் விரைவாக நிறைந்து ஓடி அதே மத்தியத்தரக் குடும்பத்து இளைஞன் குபேரசம்பத்துக்கு அதிபதியாகி விரும்பிய பெண்ணையே மணந்து கொள்வதாக முடிகிறதென்று வைத்துக் கொள்வோம். படத்தின் நீளம், ஓடுகிற கால அளவு, படிப்படியான நிகழ்ச்சிகள் இவற்றுக்கு ஏற்றபடி சுக துக்க ஏற்றத் தாழ்வுகள் அமைக்கப் படாமல் ஏனோ தானோ என்று அமைக்கப் பட்டிருந்தால் பார்க்கிறவர்களுக்கு வாழ்க்கையைப் பற்றியே பொய்யான நம்பிக்கை ஏற்பட்டுவிடும்.

முறையுள்ள படிப்படியான உழைப்பையும் படிப்படியான முயற்சிகளையும் இணைத்துக் காட்டாமல் செப்பிடு வித்தையைப் போலப் பிரமையான சுகங்களை முன் நிறுத்திக் காட்டும் கலைகளால் நிரந்தரமான குணங்கள் பாதிக்கப் படும். பள்ளி, கல்லூரி மாணவர்களும், இளைஞர்களும், பிறரும், இப்படிப் பிறழ உணர்வதன் காரணமாகச்

சமூகத்தை இவர்கள் மதிக்கிற விதமே போலித்தன்மை உள்ளதாகி விடுகிறது. போலியாக மதிக்கப் பழகிக் கொள்ளும் பல பழக்கங்கள் நாகரிக உலகிற்குத் தேவை என்று இன்றைய நிலையில் கருதப்பட்டாலும் அப்படிப்பட்ட மதிப்பு ஒரு தொற்று நோய். சமூகத்தில் நியாயமும், சத்திய மும் காற்றுப் பட்டுப் பட்டுக் கரையும் கற்பூரம் போலப் படிப்படியாகக் கரைவதற்குத் துணை நிற்பது இந்தப் போலி மதிப்பீடுதான். வேகமான சுக துக்கங்கள் இன்றைய வாழ்க் கையில் மனிதனுடைய உடலையும் பாதிக்கின்றன. எதிலுமே அவசரம் அதிகம். சுகத்திலும் பிடிபடாத மகிழ்ச்சி. துக்கத்திலும் பிடிபடாத வேதனை. எந்த உணர்ச்சியாலு லும் அதற்காகப் பதற்றமடைதலை வேகமான வாழ்வில் காண்கிறோம். இரத்த அழுத்தமோ இரத்தக் கொதிப்போ, ஏற்படுவதற்குக் காரணமான நிலைகள் என்று இவற்றைச் சொல்லுவதில் பிழையில்லை.

உலகத்துச் சுக துக்கங்களால் சலிப்படையாத ஒரு நிலையை 'உபசாந்தி!' என்று பழைய காலத்துப் பெரியோர் கள் போற்றிப் பேணி வந்தார்கள். சுகதுக்கங்களினால் சலிப்படையாதவன் திரைப்பட வாழ்க்கைபோல் ஓடுகிற நிகழ்ச்சிகள் உள்ள விரைவான வாழ்க்கைக்குத் தவிப்ப தில்லை.

அவசரமாக வாழ்வதற்கும் பளீர் பளீரென்று அவ்வப் போது மின்னிப் பிறரைக் கவர்ந்து கொண்டேயிருப்பதற்கும் ஆசைப்பட்டு நிலையான உழைப்பையும், மதிப்பீட்டையும் ஒருபோதும் புறக்கணிக்கக் கூடாது.

## மின்னல் ஆசை

நாடகங்களும், திரைப்படங்களும் பொழுது போக்குக் கலைகள். மழையைப்போல் பருவங்களில் மட்டும் பெய்து வீழ்கிற ஆசையை விடச் சூரியனைப் போல் நாள் தவறாமல் உதித்துக் கொண்டிருக்கிற நிலையான கலைக் குணங்கள் தாம்

காலத்தை எதிர்த்து நீந்தும். குத்து விளக்கைப்போல் ஒரு சீராக நிதானம் தவறாமல் பிரகாசம் தருகிற வாழ்க்கையை மறந்துவிட்டு அவ்வப்போது மின்னிப் பிறருடைய கண்ணைப் பறிக்கும் வாழ்வுக்குப் பறக்கும் தவிப்பு சான்றோர்களால் உயர்வானதென்று கணிக்கப் பட மாட்டாது.

அநுபவங்களிலும் நனையாமலும், காயாமலும் நாம் விரும்புகிற விதமான சூழ்நிலைகள் திடீர் திடீரென்று ஏற்பட்டு விடவேண்டுமென்று கனாக் காண்பது திரைப்படத்தில் சுகங்கள் திடும் திடுமென வருவதுபோல் வேகமானவை.

ஆனால் துரதிருஷ்டவசமாக மின்னி மின்னி மறைய வேண்டுமென்ற ஆசைதான் இன்று பலருக்கு இருப்பதாகத் தெரிகிறது. நிலையானதும் கண்ணைப் பறிக்காததுமான நிதானமுள்ள பிரகாசத்துக்கு ஆசைப்படாமல் கண்ணைக் குத்தி இழுப்பதுபோல் கவரும் ஒளி சிதறுகிற பிரகாசத்துக்குத்தான் இன்று பலர் ஆசைப்படுகிறார்கள். இந்த ஆசையை நாடக மேடைச் சுகங்கள் என்பதா, திரைப்படச் சுகங்கள் என்பதா—என்று சொல்லத் தயங்கினாலும் நாடகத்தைவிட மின்னுந் தன்மையும் வேகமும் அதிகமென்பதனால் 'திரைப்படச் சுகங்கள்' என்றே கூறலாமெனத் தோன்றுகிறது. இளமைப் பருவத்துச் செல்வங்கள் என்று இன்று அளக்கப்பட்டு இந்தப் பரந்த பாரத தேசத்தின் நாளைய மனிதர்கள் என எதிர்பார்க்கப்படுகிற பிள்ளைகள் பலரிடம் இப்படி மின்னி மின்னி மறைய வேண்டுமென்ற ஆசைதான் அதிகமாக இருப்பதை இன்று காண்கிறோம். இது இந்த நாட்டுக்கு நல்லதில்லை என்று கவலைப் படுவதைத் தவிர நாம் இப்போது வேறென்ன செய்யலாம்?

## விரைந்த வளர்ச்சி

நிதானமாகவும், படிப்படியாகவும் உழைத்து முன்னேற வேண்டிய இளைஞர்கள் கூட இன்று விரைந்த வளர்ச்சிக்குத் தவிக்கிறார்கள். அறத்தையும் நேர்மையையும் பற்றி ஆசிரியர்கள் கற்பிக்கும்போது எதிரே அமர்ந்து கற்றுக்

கொள்ளுகிற மாணவர்களுக்கே அவற்றில் நம்பிக்கை பதிவதில்லை. ஏதோ பழைய நூலாசிரியர்கள் பழைய உலகத்துக்குச் சொல்லி வைத்து விட்டுப் போன நீதிகள்; இன்றைய உலகத்துக்கு அவை பயன்படப் போவதில்லை என்பது போல் ஒரு சலிப்பு மனப்பான்மை எங்கும் பரவியிருக்கிறது. இப்படிப் பட்ட மனப்பான்மை நாட்டுக்கு நல்லதில்லை.

இன்று திரைப்படக் கதைகளிலும், நாடகக் கதைகளிலும், அந்தக் கதைகளில் வருகிற எவருடைய முன்னேற்றத்தைப் பற்றியாவது காண்பிக்கும் போது அந்த முன்னேற்றத்துக்கு உலகியல் ரீதியான வெறும் முயற்சிக் காரணங்களை விரைந்து காண்பிக்கிறார்களே ஒழிய அறமும், நேர்மையும் சிறிதளவாவது துணை நிற்பதாகக் காட்டுவதில்லை. வகுப்பறைகளில் ஆசிரியர்கள் நீதி போதனைப் பகுதிகளையும், அறநூற் கருத்துக்களையும் கற்பிக்கும் போது அவை சாரமற்றவைகளாகத் தோன்றி மாணவர்களைக் கவரத் தவறுகின்றன. நல்ல ஆசிரியர்கள் நல்ல சூழ்நிலையில் உள் மனத்திலிருந்து படிந்த பகுதிகளாகத் தேர்ந்தெடுத்துச் சொல்லிக் கற்பித்தாலும் அறநூற் கருத்துக்கள் இளம் பிள்ளைகளைக் கவர்ந்து இழுக்கத் தவறி விடுகின்றன. திரைப் படச் சுகங்களைப் போல் மின்னி மின்னி நேர்கிற சுகங்களுக்குத்தான் இன்றைய இளந்தலை முறை மனம் தாழ்த்த ஆசைப்படுகிறது. வயதானவர்கள், இளைஞர்கள். என்ற பாகுபாடு இதற்குத் தேவையில்லை. அறத்திலும், நீதியிலும், நேர்மையிலும் நம்பிக்கை வைப்பதற்கு வயது ஒரு காரணமும் ஆகாது. அவற்றில் நம்பிக்கை வைக்கிற இளம் பிள்ளையே மனம் முதிர்ந்தவனாகத் தோன்றவும், நம்பிக்கை வைக்காத வயது முதிர்ந்தவரே மனம் முதிராதவராகத் தோன்றுவதும் கூடும்.

திரைப்பட வளர்ச்சி போல் ஓடும் சுகங்களில் மயங்கும் பரிதாபகரமான சூழ்நிலை வாழ்க்கையைப் பற்றிக் கொண்டு ஆட்டுகிற தலைமுறை எதுவோ அது தேசத்தின் போதாத காலம். மின்னி மின்னி மறைய வேண்டுமென்று வேகம் வேகமான சுகங்களுக்குப் பறந்து கொண்டு தவிப்பதைவிட

நிலையான நலத்துக்கு ஆசைப்படும் பரிபக்குவம் வருவது நாட்டுக்கே நல்லது. இந்த நாட்டின் எதிர்கால நலத்துக்கு. இப்படி ஒரு பரிபக்குவம் மிக மிக அவசியமானது.

இவ்வாறு எழுதியிருப்பதனால் திரைப்படங்களும் நாடகங்களும் தமக்கென மேற் கொண்டு நிகழ்கிற கதையைப் பற்றிய விவாதப் பிரச்னை ஏதும் இங்கு எழுவதற்கு நியாயமில்லை. 'கலை உருவம்' என்ற அமைப்பில் அவை கதாபாத்திரங்களின் வாழ்க்கை வளர்ச்சியையோ, சுகதுக்கங்களையோ விரைவாகக் (ஓரளவு தடுமாறாமல்) காட்டுவதற்கு உரிமையுள்ளவைதாம். அவை அவ்வாறு காண்பிப்பதைக் கலையாக மட்டும் இரசிக்கலாம். வாழ்க்கையிலும் அதே அளவு வேகம் வேண்டுமென்று ஏங்கி நிற்கக் கூடாது. வெறும் துக்க நிகழ்ச்சிகளுக்காக அந்த வேகத்தை யாரும் எதிர்பார்க்க மாட்டார்கள். ஆனால் சுகங்கள் வரும்போது மட்டும் சினிமாக் கதை நிகழ்ச்சிகளைப் போல் வேகமாக வரவேண்டுமென்று பலர் ஆசைப்படுவார்கள். வேடிக்கையான ஆசைதான் இது! வேறென்ன சொல்வது?

# பாவம் ஆசிரியர்கள்

இந்த சிந்தனை மேடையில் கல்விக் கூடங்களையும் ஆசிரியர்களையும் பற்றி எழுதுவதென்று தீர்மானமாகி விட்டது. ஒரே ஒரு நேயர் (அவரும் ஒரு பள்ளி ஆசிரியர்தான்) உங்கள் சிந்தனை மேடையில் கல்விக் கூடங்களையும், ஆசிரியர்களையும் பற்றிய சிந்தனைக்கு இடம் உண்டோ இல்லையோ என்று எழுதிக் கேட்டிருக்கிறார். 'தாராளமாக இடம் உண்டு' என்று பதில் சொல்லிக் கொண்டிருப்பதை விடக் காரியத்தில் காண்பித்து விடுவதே நல்லதல்லவா?

சிந்தனைகள் மலரவும், மலர்விக்கவும் காரணமாக இருக்கும் முதல் எண்ணம் தூய்மையான ஆசிரியன் எவனோ அவனிடமிருந்து தான் தோன்றியிருக்க வேண்டும். மகா முனிவர்கள் புண்ணிய நதிகளின் கரைகளிலே புல்லில் வேய்ந்த சின்

ளஞ் சிறு தவக் குடில்களில் இருந்து கொண்டு பேரரசர்களின் பிள்ளைகளும் தங்களை இருப்பிடம் தேடி வந்து கற்கும்படி அறிவின் கம்பீரத்தோடு வாழ்ந்த காலம் தொடங்கிக் கொல்லம் ஓடு வேய்ந்த விசாலமான வகுப்பறைகளில் ஓட்டு வெக்கையையும் வீட்டு வாழ்க்கையின் வறுமை வெக்கையும் சேர்த்து அனுபவித்துக் கொண்டு ஒடுங்கி நைந்த தோற்றத்தோடு வாழும் இன்றைய 'வாத்தியார்'கள் வரை அனைவரும் ஆசிரியர்கள்தாம். இன்றைக்குப் பொது மேடைகளில் பேசுகிறவர்கள் புகழ்வதற்கு யாரும் கிடைக்காத நேரத்தில் ஆசிரியர்களைப் பற்றிப் புகழ்வது உள்பட மிக மிகப் பழங் காலத்துப் புகழ்ச்சி மொழியாகிய,

"எழுத்தறிவின் இறைவன் ஆகும்"

என்பது வரை எல்லாவற்றையும் இப்போது சிந்திக்கலாம். புகழில் என்ன இருக்கிறது? மனத்திலிருந்து பிறவாமல் நாவிலிருந்தும், உதடுகளிலிருந்தும் பிறக்கிற வெறும் புகழ்ச்சி செவிகளை மட்டுமே நிறையச் செய்யும். ஆனால் இன்றைய ஆசிரியனுக்கு வயிறும் நிறைய வேண்டுமே! அப்படி வயிறு நிறைவதற்குத் தன் தொழிலும் பயன்பட்டாக வேண்டுமே!

எப்போதோ பல நூறு ஆண்டுகளுக்கு முற்பட்ட காலத்தில் வாழ்ந்த ஆசிரியர்கள் கற்பதற்காகத் தங்களைத் தேடி வந்து குருகுல வாசம் செய்யும் மாணவர்களுக்குத் தத்தம் ஆசிரமங்களிலேயே உணவளித்து வளர்த்துப் பேணி அவர்களுடைய வாழ்க்கையின் ஒவ்வொரு விநாடியும் எப்படி எப்படி உருவாக வேண்டும் என்பதையும் கல்வியோடு சேர்த்தே கற்பித்திருக்கிறார்கள். இன்றைய நிலையோ முற்றிலும் மாறுபட்டது; வேறுபட்டது. வகுப்பறைகளில் கழியும் சில மணி நேரங்களுக்குப் பின் ஆசிரியனும், மாணவனும் தனித்தனியே பிரிந்து விடுவதைப் போல் இன்று வாழ்க்கையும் கல்வியும் கூடத் தனித் தனியே பிரிந்துதான் இருக்கின்றன.

வேத காலத்திலும், துரோணர் போன்ற இதிகாச கதா பாத்திரங்களைப் பற்றிய நினைவு உண்டாகப்படுகிற காலத்திலும் கல்வி கற்பிப்பது என்ற செயல் கோயில் வழிபாட்டைப்

போல ஒரு புனிதமான இயக்கமாக இருந்திருக்க வேண்டு மென்று நாம் அநுமானிக்க முடிகிறது. கற்பிப்பது என்பது ஒரு காலத்தில் எந்தவிதமான பிரதிபலனையும் எதிர்பாரா மல் செய்யப்படுகிற புனித இயக்கமாக இருந்ததென்று நினைத்துவிட்டு ஒரு விநாடிக்குப்பின் அப்படி இருந்த பொற் காலத்தை மீண்டும் எண்ணிச் சிந்தனையைப் பின்னோக்கி ஓட விடும் போது உங்களுக்கு மெய்சிலிர்க்கிறதல்லவா? அப்படி இருந்த காலத்தில் அறிவை வழங்குகிறவன் எவனோ அவனும் தெய்வமாக மதிக்கப் பெற்றிருப்பான் என்பதில் சிறிதும் சந்தேகமே இல்லை. இப்போது மதிக்கப்படுகிற காரணங் களும், மதிக்கிற காரணங்களும் விதம் விதமாக மாறியிருக் கின்றன. பணமுடையவர்கள் சிலரை அவ்வுடைமைக்காகத் தெய்வங்களாகத் தொழுகிறோம். புகழுடையவர்கள் சிலரை அவ்வுடைமைக்காகத் தொழுகிறோம். பதவியும் செல்வாக் கும் உள்ளவர்கள் சிலரை அவற்றுக்காகத் தொழுகிறோம். குணங்களுக்காகவும் அறிவுடைமைக்காகவும், அவற்றை உடையவர்களைத் தேடித் தொழுவது இன்றைய சமுதாய வாழ்க்கையில் மிகவும் குறைந்து போயிருப்பதாகவே தோன்றுகிறது. எந்த விதத்தில் எப்படி இந்த மதிப்பீடு குறைந்து போயிற்று! என்று சற்றே சிந்தித்துப் பார்க்க லாம்.

## ஏணிகளைப் போல

இன்றைய நிலையில் இந்த நாட்டுக் கல்விக் கூடங்களை யும், அவற்றில் உழைக்கும் ஆசிரியப் பெருமக்களையும் பற்றிச் சிந்திப்பதற்கு நிறையப் பிரச்னைகள் இருக்கின் றன. ஆசிரியராக இருப்பதென்பது வேத காலத்து இலட்சியத்தைப் போல் இன்று பயன் எதிர்பாராத புனித இயக்கமாக இல்லை. அப்படி இருப்பதும் இன்று சாத்திய மாகாது. எனவே இன்றைய நிலையில் கற்பிப்பதென்பதை உழைப்பாகவும் தொழிலாகவும்தான் கொள்ள வேண்டும். குறிப்பிட்ட ஆசிரியர் தொழிலில் ஈடுபட்டிருப்பவர்களும் அதை அப்படித்தான் கருதியிருக்க முடியும்.

ஆசிரியர் தொழிலில் ஈடுபட்டிருப்பவர்கள் எப்போதாவது அதில் சலிப்பு அடைவதற்கும் இடமிருக்கிறது. ஆசிரியர்கள் ஏணியைப் போல் பிறர் ஏறி ஏறி மேல் படிக்குச் செல்வதற்குத் தாங்கள் சாதனமாக மட்டும் அமைந்து அவ்வளவில் நின்றுவிடுகிறார்கள். இந்தச் சிந்தனையை வேறொரு கோணத்தில் மாற்றிச் சிந்தித்துப் பார்த்தால் வேதனையாகக் கூட இருக்கலாம். திண்ணைப் பள்ளிக்கூட வாத்தியார் திருவேங்கடத்திடம் அரிச்சுவடி படித்த மன்னார்சாமி சிலபல ஆண்டுகளில் ஐ.ஏ.எஸ். தேறி அதே மாவட்டத்துக்குக் கலெக்டராகக் கூட வந்துவிடலாம். வாழ்க்கைத் தொல்லைகளும், குடும்பத் துன்பங்களும் முன்னேற முடியாமல் தடுக்கிற பட்சத்தில் வாத்தியார் திருவேங்கடம் அதே ஒட்டுப் போட்ட சட்டையும் பழுப்பேறின வேட்டியுமாக அரிச்சுவடி சொல்லிக் கொடுத்தே தம் காலத்தைக் கழித்து விடுவார். பதவி ஏற்றத் தாழ்வுகளையோ, செல்வாக்கையோ இப்படிக் கணித்துப் பார்த்து முடிவு சொல்வது கூடாதுதான். ஆனாலும் இன்றைய சமுதாய வாழ்வில் சராசரி மதிப்பீடுகள் எல்லாமே இப்படித்தான் இருக்கின்றன. எனவே நாமும் வேறு விதமாக மதிப்பீடு செய்ய முடிவதில்லை. சமூகத்தில் ஆசிரியர்களுடைய மதிப்பு பெருக வேண்டும் என்று எல்லோரும் நினைக்கிறார்கள், ஒப்புக் கொள்கிறார்கள். ஆனால் 'எந்த விதத்தில் அதைப் பெருகச் செய்வது?' என்ற கேள்வி வரும்போதுதான் தயக்கமாக இருக்கிறது. 'கற்பிப்பதும் ஒரு தொழில்; அதனாலும் வருவாய் தேட முடியும்' என்ற நிலையில் உள்ள இந்த நூற்றாண்டில் ஓர் ஆசிரியன் அடைய முடியாத அவ்வளவு சமூக மதிப்பைக் கற்பிப்பது தொழிலாக இல்லாத காலத்தில் முனிவர்களும், பெரியவர்களும் அடைந்திருக்கிறார்கள். மாபெரும் மன்னர்கள் கூடத் தங்களைத் தேடி வந்து வணங்கும்படி அடர்ந்த காடுகளிலும், நதிக் கரைகளிலும் ஒதுங்கி வாழ்ந்துகொண்டே தெய்வங்களைப் போல மதிக்கப் பட்டிருக்கிறார்கள் அந்தப் பெரியவர்கள். சொந்த அமைச்சர்களிடமும் கலந்து ஆலோசிக்க முடியாத பெரிய பெரிய

காரியங்களை இப்படி ஒதுங்கி வாழ்ந்த முனிவர்களையும், பெரியவர்களையும் தேடிப் போய்க் கலந்து ஆலோசித்திருக் கிறார்கள் பழைய காலத்து அரசர்கள். இன்றைய ஆசிரி யனைத் தேடி (திண்ணைப் பள்ளிக்கூட ஆசிரியனே, கல்லூரிப் பேராசிரியனே, யாராக இருந்தாலும் சரி) இப்படிப்பட்ட மாபெரும் அரசியல் பிரச்னைகள் எதுவும் வரப் போவதில்லை. இன்றைய ஆசிரியர்களுக்குள்ள வேதனைகளை ஒவ்வொன்றாக எண்ணிப் பார்த்தால் அவர்கள் இந்தச் சமூகத்தை ஒரு நாளும் மன்னிக்க மாட்டார்கள்.

## குறைந்த கவர்ச்சி

ஒரு சிறிய அரசாங்கக் காரியாலயத்தில் இரண்டாந் தரத்துக் குமாஸ்தாவாக வேலை பார்க்கிற ஓர் இளைஞனையும், உயர்தரப்பள்ளியில் ஆசிரியனாக வேலை பார்க்கிற ஓர் இளைஞனையும், முன் நிறுத்திப் பெண்ணுக்குத் திருமணத்துக்கு வரன் பார்த்துக் கொண்டிருக்கிற பெற்றோரிடம் கேட்டால் குமாஸ்தாவைத்தான் முதலில் நாடுவார்கள். 'மனித சமு தாயத்தை உருவாக்குகிற புனிதப் பணியைச் செய்கிறவர் கள்' என்ற ஆசிரியப் பணியின் இலட்சிய அடையாளங்களை யெல்லாம் பொது உலகத்தில் ஒப்புக்கொள்ளமாட்டார்கள். 'வக்கத்தவனுக்கு வாத்தியார் வேலை' என்ற தரக் குறை வான பழமொழியை உண்டாக்கியதே பொதுஉலகம்தானே?

சேம நிதி, ஓய்வுக்கால ஊதியம், மாணவர்கள் பல ரால் புகழப்படும் நிலை— எல்லாம் இருந்தும்கூட இந்தத் தொழில் ஏதோ ஒரு விதத்தில் கவர்ச்சி குன்றியதாகவே கருதப் படுகிறது. உத்தியோகம் தேடி ஆவலோடு புறப்படு கிற பட்டதாரி இளைஞர்களும் கம்பெனிகள், சர்க்கார் வேலை வியாபாரம், பொறியியல் துறை வேலை, இவைகளுக்கு எல்லாம் முயன்று இயலாமையோடு அலுத்த பின்பே, ''சரி! சரி! கடைசியாக டீச்சர்ஸ் டிரெயினிங்குக்காவது போய்ச் சேரலாம்'' என்ற முடிவோடு வருகிறார்கள். தனியார் துறைக் கம்பெனிகளிலும், வியாபார நிறுவனங்

களிலும் செய்வதைப் போல் விருப்பு—வெறுப்பு—வேண்டிய வர்—வேண்டாதவர் நிலைகளைக் கொண்டு திடீர் திடீரென்று ஊதிய வளர்ச்சி (இன்க்ரிமெண்ட்)களைத் தந்து தூக்கி விடப் படலாம் என்ற அதிர்ஷ்ட நம்பிக்கை கூட ஆசிரியர் தொழி லில் இல்லை. திட்டமிடப்பட்ட எளிய ஊதியம் வீங்காமலும், மெலியாமலும் ஒரு சீராகக் கிடைப்பது தவிர (சில பள்ளிக் கூடங்களில் ஒரு சீராகக் கிடைக்காமல் இரண்டு மாதப் பாக்கி, மூன்று மாதப் பாக்கி நின்று விடுவதும் உண்டு) வேறு எந்த அதிர்ஷ்டக் கனவுகளுக்கும் ஆசிரியர் தொழிலில் இடம் இல்லை. மில்லில் வேலை பார்க்கிறவர் வருஷத்துக்கு இரண்டு மூன்று முறை போனஸ் கிடைக்கும் என்று நினைப்பது போல் ஆசிரியர் தொழிலில் நாளைய அதிர்ஷ்டம் என்று எதை நினைத்தும் அதிர்ஷ்டக் கனவுகள் காண்பதற்கு வாய்ப்புக்கள் அறவே இல்லை.

தன்னிடம் படிக்கிற;பையன் காரிலே வந்து பள்ளிக் கூடத்தில் இறங்குவதைப் பார்த்துக் கொண்டே தான் வேர்க்க விறுவிறுக்க நடந்து வந்து கற்பிக்கிற பள்ளி ஆசிரி யன் மானிட சமுதாயத்தை உருவாக்கும் பணியில் ஈடுபட் டிருப்பதற்காகப் பெருமைப்படலாம். ஆனால் ‘தன்னுடைய சுகதுக்கங்களை உற்று நோக்கித் தன்னை இந்தச் சமூகம் எவ் வளவுக்கு மதித்துக் கொண்டிருக்கிறது?’ என்ற கேள்வியை அவன் மனம் அவனிடமே கேட்கத் தொடங்கி விட்டால் சிந் தனை அந்த இடத்தோடு அறுபட்டுப் போவதோடு மனமும் கண்களும் கலங்கிவிடும். ‘ஓர் ஆசிரியனைச் சமூகம் எந்த அளவு மதிக்கிறது?’ — மிகவும் பரிதாபகரமான கேள்வி இது. தான் இந்தச் சமூகத்துக்கு வெறும் ஏணியாக இருந்து கொண்டிருக்கிறோம் என்ற உண்மை அந்த விநாடியில் அவனுக்குப் புரியத் தொடங்கி விடுகிறது. ‘வேத காலத்து முனிவர்களும் அப்படித்தானே இருந்திருக்கிறார்கள்?’ என் றெண்ணி இன்றைய ஆசிரியன் தன்னைத் தியாகியாகப் பாவித் துக் கொண்டும் திருப்திப் படமுடியாது. வேத காலத்து முனிவர்கள் புகழையும், பொருளையும் பற்றிக் கவலைப் படா மல் ‘நாம் இந்த உலகத்தில் புத்தியின் பரம்பரையை

உருவாக்குகிறோம்' என்ற பெருமிதமான நம்பிக்கையோடு ஒதுங்கி வாழ்ந்தார்கள். இன்றைய ஆசிரியர்கள் அப்படி வாழ முடியாது. மற்றத் துறையில் இருப்பவர்களுக்கு உள்ளதைப் போலப் பொதுவாழ்க்கையின் எல்லா விதமான கவலைகளும் இன்றைய ஆசிரியர்களுக்கும் உண்டு. அதே சமயத்தில் பொதுவாழ்க்கையின் எல்லா விதமான வசதிகளின் கதவுகளும் இவர்களுக்காகத் திறக்கப்படவில்லை. அதனால்தான் இந்தத் தொழில் பலவிதத்திலும் கவர்ச்சி குறைந்ததாகப் போய்விட்டது.

## கல்விக் கூடங்கள்

ஆசிரியர்கள் நிலைதான் இப்படி என்றால் கல்விக் கூடங்களின் நிலையைப் பற்றிச் சொல்லவே வேண்டாம். முக்கால் மணி நேரத்துக்கு ஒரு பாட வேளையாகப் பிரித்து, 'இந்த முக்கால் மணி நேரத்துக்கு இந்தக் கனவைத்தான் காண வேண்டும்' என்று வற்புறுத்திக் கனவு காணச் செய்வது போல் எதிலும் மனத்தை ஆழ விடாமல் செய்கிறது இன்றைய படிப்பு. இளம் பருவத்து மாணவன் இந்த நூற்றாண்டில் தன்னுடைய ஆசிரியரை எப்படி அளந்து பார்த்து மதிக்க முடியும் என்பதையும் சிறிது சிந்திக்கலாம்.

மனம் பக்குவப்படாத பதினாறு பதினேழு வயது மாணவன் தன் கண்களுக்கு முன்னால் தெரிகிற உலகத்தில் படாடோபமாக வாழ்கிற பலரையும் அப்படி வாழ முடியாத தன் ஆசிரியரையும் இணைத்து எடை போட்டுப் பார்ப்பான். அவனுடைய நிறுவையில் ஆசிரியர் பெரும்பாலும் எடை குறைந்தே தோன்றுவார். சமூக வாழ்க்கையில் எந்த ஆடம்பரங்களையும் கடைப்பிடிக்க இயலாத எளிய வருவாய் உள்ள இனம் ஆசிரிய இனம். கப்பல் போல் நீளக் காரில் தனி ஆளாகப் பவனி வருகிற திரை வானத்துத் தாரகைகளையும், வெள்ளம் வெள்ளமாய்க் கூட்டம் கூட மேடையேறி மாலையும் கழுத்துமாக நிற்கும் அரசியல் பிரமுகரையும், விநாடிக்கு இலட்ச ரூபாய் வரவு செலவு செய்யும் வியாபாரியையும்,

பார்த்துப் பார்த்து ஆச்சரியப்படத் தொடங்கும் பிஞ்சு உள்ளங்கள் அவ்வாறே தன் ஆசிரியரிடமும் ஆச்சரியப்படத் தக்க சக்தி ஏதாவது இருக்கிறதா என்று தேடுகின்றன. புத்தியின் பெருக்கமே ஓர் ஆச்சரியம்தான். ஆனால் புத்தியின் பரப்பையும் பெருக்கத்தையும் மட்டுமே ஆச்சரியமாக மதிக்கும் மனப் பக்குவம் வேக மயமான இந்த நூற்றாண்டில் எத்தனை இளம் பிள்ளைகளுக்கு இருக்க முடியும்? இருந்தால்தான் நாட்டின் சூழ்நிலை மிகவும் நன்றாகி விடுமே?

பள்ளிப் படிப்பைவிட வேறு ஞாபகங்கள் அதிகமாகச் சூழ்ந்துள்ள இந்தக் காலத்தில் பொது வாழ்வில் கல்விக் கூடங்களின் எல்லையில் வகுப்பு வேளைகளில் மட்டும்தான் ஓரளவுக்கு இன்றைய மாணவரால் ஆசிரியனையும் வியக்க முடிகிறது. எஞ்சிய பெரும் போதெல்லாம் அவர்கள் வியப்பதற்கு வேறு பல பெருமைகள் அவர்களைச் சூழ்ந்து கொள்கின்றன. எனவே பழைய காலத்துக் குரு பக்தியைப் போலக் கட்டை விரலை அரிந்து தருகிற தீர மாணவர்களை இன்று காண முடியாது. ஒரு வேளை வாத்தியாருக்குக் கட்டை விரல் நஷ்டத்தை உண்டாக்குகிற புதுவிதமான தீர மாணவர்கள் வேண்டுமானால் இந்த நாளில் கிடைக்கலாம். கல்விக் கூடங்களில்ஒழுக்கமும், கட்டுப்பாடும் பண்பும் கற்பித்து மாணவர்களை உருவாக்குவதில் கவனம் குன்றி வெறும் பரீட்சைக்கு உருவாக்குவதில் மட்டும் கவனம் பெருகியுள்ள காலம் இது பரீட்சை எழுத உருவாக்கப் படுகிற மாணவர்களுக்கு அதற்கான தயாரிப்புக்களைத் தவிர வேறு எதுவும் கற்பிக்க நேரமும் அவகாசமும் இல்லை எனலாம். ஒழுக்கத்தையும், பண்பாட்டையும் கோட்டை விட்டு விட்டுக் கணக்கையும், விஞ்ஞானத்தையும் மட்டுமே வளைத்து வளைத்துக் கற்பித்துக் கொண்டிருப்பதில் என்ன பயன்? விதை நெல்லை அவித்துச் சோறாக்கினால் எதிர்கால விளைவுகளைப் பற்றி என்ன சொல்வது?

எல்லாக் கட்டிடத்துக்கும் அடிப்படை அவசியம் எந்த விதமான கல்வியை வேண்டுமானாலும் கற்பியுங்கள். ஆனால் அதற்கு அடிப்படையாக ஒழுக்கமும், பண்பாடும் அமைந்

திருக்க வேண்டும் என்பதை மட்டும் கண்டிப்பாக நினைவு கொள்ள வேண்டும். ஆகவே இன்றைய ஆசிரியர்களுக்குச் சமூகத்தின் மதிப்பீடு போதவில்லை. இன்றைய கல்விக்கு ஒழுக்கமும் பண்பாடும் போதவில்லை. கற்பிப்பவர்க்கும் குறை. கற்பிப்பதற்கும் குறை. தீர்வதானல் இரண்டு குறையும் அல்லவா ஒருங்கு தீர வேண்டும்? ஆசிரியர்களை மட்டும் குறை சொல்லிப் பயனில்லை. சமுதாய வாழ்வில் தங்களுடைய மதிப்பு இன்னும் பெருகவேண்டுமென்று அவர்கள் எதிர்பார்ப்பது நியாயமான கோரிக்கையே. எழுத்தறிவித்தவனை இறைவனாக வணங்க முடியா விட்டாலும் போகிறது. ஆனால் தயவுசெய்து மனிதனாகவாவது மதியுங்கள்! இன்று உருவாகிற புதிய பாரதத்தில் பள்ளிக்கூடங்கள் நாற்றங்கால்களைப் போன்றவை. நாற்றங்காலிலேயே கெட்டுப் போகிற பயிர் நடுகைக்குப் பயன்படுமா? நாற்றங்காலையும் பயிரையும் சேர்த்தே பேணவேண்டுமல்லவா?

# காலம் தேய்த்த கலைகள்

கலைகள் என்றும் அழியப் போவதில்லை; ஆனால் அவற்றின் நோக்கமும், பயனும், காலந்தோறும் மாறிக் கொண்டே போவதுண்டு. சிற்பம், சித்திரம், சங்கீதம் போன்ற நளின கலைகள் பல நூற்றாண்டுகளுக்கு முன் என்னென்ன இலட்சியங்களை எல்லையாகக் கொண்டிருந்தனவோ அந்த இலட்சியங்களும், அவற்றின் எல்லைகளும் இன்று சுருங்கிப் போயிருப்பதைக் கண்கூடாகக் காண்கிறோம். இந்தச் சுருக்கத்துக்குக் காரணம் என்ன?

"வேலை செய்தால் கூலி—கூலி கொடுத்த அளவுக்கு வேலை'—என்று தொழிலும் பயனும் அருகருகே வைத்துக் கணக்கிடப்படுகிற நூற்றாண்டில் சிற்பமும், சித்திரமும், சங்கீதமும் எந்த அளவுக்குப் பாதிக்கப் பட்டிருக்கின்றன என்பதைச் சிந்திக்கலாம். தொழிலும் கலையும் ஒன்றாக முடியாத தனித் தனித் துறைகள். ஒரு தொழிலைச் செய்கிறவன்

அதை முடித்ததும் அதற்கென்று கிடைக்கிற பயனைப் பெற்றுக் கொண்டு மனநிறைவு அடைந்து விடுவான். ஆனால் ஒரு கலையின் மன நிறைவோ, புகழோ, இப்படிச் சுருக்கமாகக் கிடைத்து ஓய்ந்துவிடக் கூடியதில்லை. கலையின் நயத்தைப் போலவே அதற்குக் கிடைக்கிற புகழும் சிரஞ்சீவித் தன்மை வாய்ந்தது. தலைமுறை தலைமுறையாக வளர்ந்து கொண்டே போகக் கூடியது. புகழ் கணிக்கப்படுகிற காலத்துக்கு முற்றுமிட மில்லாமல் வளர்ந்து கொண்டே போகக் கூடிய இந்தப் பெருமை கலைத்துறைக்கு மட்டுமே உண்டு.

ஆனால் சிரஞ்சீவித் தன்மை வாய்ந்த அந்தக் கலைகளெல்லாம் இன்று ஆற்றல் குன்றித் தேய்ந்து போய் நிற்கின்றன. "இந்த உலகத்தை இன்றும், நாளையும், அழகாய் வைத்துக் கொண்டிருப்பதற்குக் காரணமானவற்றில் தன் கலையும் ஒன்று'—என்ற பெருமிதத்தோடு நிமிர்ந்து நின்றுகொண்டு பலரைக் கைகூப்பித் தொழச் செய்த இலட்சியக் கலை வீரர்களைப் பற்றி நினைத்து விட்டு இன்றைய நிலையையும் நினைத்தால் மனத்துக்கு வேதனையாகத்தான் இருக்கிறது.

தன்னுடைய மனத்தின் எண்ணங்களையும் தவத்தையும், அந்தத் தவத்தின் ஆற்றல் வாய்ந்த அழகுகளையும் செதுக்கிச் செதுக்கிக் கல்லைத் தெய்வமாக்கும் சிற்பியின் கைகளை எந்த விலையால் மதிப்பிட முடியும்? நினைப்பில் கற்பித்துக் கற்பித்து அழகாக்கி வர்ணங்களாலும், கோடுகளாலும் அதைக் கண்ணுக்குத் தென்படும் உருவமாய்ப் படைக்கிற ஓவியனின் சாதனைக்குத்தான் விலை ஏது?

மனிதனோடு மனிதன் பேச முடிந்த மொழியைக்காட்டிலும் ஒரு படி உயர்வாகச் சென்று தெய்வத்தோடு மனிதன் பேசுவதற்கு ஒருமொழி வேண்டுமென்றஇலட்சியத்துக்காகக் கண்டுபிடிக்கப்பட்ட சங்கீதத்துக்கும் எவரால் விலை கணிக்க முடியும்? சங்கீதம் என்பது உயர்ந்த தரத்து அன்பைப் பேசுவதற்குக் கண்டுபிடிக்கப்பட்ட மொழி. தெய்வத்தின் மேலோ, அல்லது தெய்வத்தன்மை வாய்ந்தவர்கள் மேலோ ஏற்படுகிற பக்தியை அல்லது அன்பைப் பக்குவமாக வெளி

விடுவதற்குக் கண்டுபிடிக்கப் பெற்றிருக்கும் பண்பட்ட மொழியே சங்கீதம். அது ஒரு மொழி. அன்பில் பல்வேறு நிலைகளை மிகவும் இனிமையாகவும், சுருக்கமாகவும் பேச முடிந்த மொழி. இன்று இசையும் அதன் பயனும் எப்படி எப்படியோ உபயோகப் படுகின்றன என்றாலும் ஆதியில் உயர்ந்த தரத்து அன்பை இனிமையாகவும், சுருக்கமாகவும் பேசுவதத்கு ஒரு புதிய பாஷையாகவே அது பிறந்த தென் பதை எவரும் மறுப்பதற்கில்லை. கால தேச வர்த்தமானங் களினால் இந்தக் கலைகளும் இவற்றின் இலட்சியங்களும் இன்று தேய்ந்து போயிருக்கின்றன; ஆனால் அழிந்து போய் விடவில்லை என்பது ஓரளவு நம்பிக்கை தருவதாயிருக்கிறது.

## நலிந்த வாழ்க்கை

சிற்ப சாத்திரங்களையும், கோயில் அமைப்பு முறை ஆக மங்களையும், முறையாகப் பயின்று தேர்ந்த ஸ்தபதியார் ஒருவரைச் சமீபத்தில் சந்தித்தேன். அவரிடம் பேசிக் கொண்டிருந்த சில மணி நேரத்திலே மனம் குமுற அவர் வெளியிட்ட பல கருத்துக்களை என்றும் மறக்கவே முடியாது. அவை உங்களோடும் பகிர்ந்துகொள்ள ஏற்ற கருத்துக்களே.

''எங்கள் தொழிலை விடப் பாய்முடைகிறவன், கூடை முடைகிறவன் தொழில் இலாபகரமாயிருக்கிறது ஐயா! மூன்று மாதத்தில் வாங்கிய பாய் பழையதாகியவுடன் புதுப் பாயைத் தேடி வந்து வாங்குவார்கள். கூடை கெட்டுப் போய் விட்டால் புதுக் கூடை வாங்குவார்கள். எனவே பாய் பின்னுகிறவனுக்கும், கூடை முடைகிறவனுக்கும் அவன் படைக்கிற பொருள்கள் அடுத்தடுத்துச் செவழிந்த் படி இலாபம் தந்து கொண்டே யிருக்கும்! ஆனால் நான் செதுக்கிக் கொடுக்கிற சிலையும், கட்டிக் கொடுக்கிற கோயி லும், என் காலத்துக்குப் பின்பு பல தலைமுறையானாலும் அழிவோ, சேதமோ இல்லாமல் நிலைத்து விடுகிறதே! பழைய காலத்தில் ஏதாவது ஒரு கோவிலுக்கு ஒரு சிலை செதுக்கிக் கொடுத்திருந்தாலும் அந்த ஒற்றைச் செயலுக்

காகவே எங்கள் வாழ்நாள் முழுதும் எங்களை ஆதரித்தும் பாதுகாக்க மன்னர்களும் அவர்களுடைய பரந்த மனப்பான்மையும் துணையாக இருக்கப் பெற்றோம். இப்போது அப்படி எங்களைப் பேணுவதற்கு யார் இருக்கிறார்கள்? வீடுகளையும், பெரிய பெரிய காரியாலயங்களையும், திட்டத்தோடு கட்டிக் கொடுக்க 'என்ஜினியர்கள்' புதிய யுகத்தின் வருவாய் நிறைந்த சிற்பிகளாகத் தோன்றி விட்டார்கள். எங்களைப் பொறுத்தவரையில் எங்கள் பாட்டன், மூப்பாட்டன் தலைமுறையில் கட்டப்பெற்ற கோயில்கள் கூட இன்னும் திடமானவையாக இருக்கின்றன. எப்படி நாங்கள் வயிற்றைக் கழுவுவதென்று சொல்லுங்கள். இலட்சியத்தைப் பற்றி அப்புறம் பேசலாம்.''

அந்த ஸ்தபதியாரிடமிருந்து மனக்கொதிப்போடு பிறந்த இந்தப் பேச்சைக் கேட்ட பின்பு எனக்கு ஒன்றுமே சொல்லத் தோன்றவில்லை. கூடை முடைகிறவனையும், பாய் பின்னுகிறவனையும் விட நிலையான அழகைப் படைக்கிற மதிப்பு வாய்ந்த கலைஞன் ஒருவன் தன் தொழிலில் அன்றாட வாழ்க்கைக்குச் சோறு போட முடியாததாயிருக்கிறதே என்பதை உணர்ந்து வருந்திப் பேசுகிறபோது பொய்யான சமாதானங்களைக் கூறுவதற்கு என் மனம் துணியவில்லை. இந்தச் சிற்பியைப் போலவே அன்றாட வாழ்க்கைக்குத் தொல்லைப்படுகிற சங்கீத வித்துவான்களும் இருக்கிறார்கள். அன்றாட வாழ்க்கைக்குத் தொல்லைப்படுகிற ஓவியர்கள் இருக்கிறார்கள். அன்றாட வாழ்க்கைக்குத் தொல்லைப்படுகிற கவிஞர்கள் இருக்கிறார்கள். சில உயர்ந்த கலைகளும், அவற்றைப் புரிந்து கொள்ளுகிற சமுதாய இலட்சியமும் இன்று நலிந்து போய் விட்டன. அப்படி அந்தக் கலைகளும், அவற்றைப் புரிந்துகொள்கிறவர்களும் நலிந்து போய் விட்டதன் காரணமாகவே அவற்றை ஆளும் கலைஞர்களின் வாழ்க்கையும் பொருளாதார ரீதியாக நலிந்து போய் விட்டது. இந்தப் பிரச்னையின் அவசிய அநாவசியங்களைச் சிந்திக்கும்போது பாதிக்கப் பட்டவர்களின் தொகை அதிகமா, குறைவா என்பதை வைத்து மட்டும் சிந்திக்கக் கூடாது,

பாதிக்கப்பட்டகலைகளின் அவசிய அநாவசியங்களை வைத்தே சிந்திக்க வேண்டும். சிற்பமும், சித்திரமும், சங்கீதமும் சமூகத்துக்கு அவசியமில்லை என்று யாரும் துணிந்து கூறிவிட முடியாது. இன்று அவை எப்படி எப்படித் தேவைப்படுகின்றனவோ அப்படித் தேவைப்படுகிற விதங்கள் வேண்டுமானுல் நலிந்து போய் மாறியிருக்கலாம்.

## வளர்ச்சியும் தளர்ச்சியும்

சிற்பிகளுக்குள்ள அத்தனை அதிகமான கவலை ஓவியர்களுக்கு இல்லை. ஓவியர்களுக்குள்ள அத்தனை அதிகமான கவலை சங்கீதத் துறையில் ஈடுபட்டுள்ளவர்களுக்கு இல்லை. ஆனுல் மொத்தத்தில் எல்லாருக்கும் ஏதேதோ கவலைகள் இருக்கின்றன. பத்திரிகைகளுக்கும், காலண்டர்களுக்கும் படம் போட்டுக் கொடுக்கிற வகையிலாவது ஓவியர்களுக்கு ஒரு நம்பிக்கை உண்டு. சபைகளிலும், வானொலிகளிலும் கிடைக்கிற வாய்ப்புக்களைப் பயன்படுத்திக் கொண்டு காலந் தள்ளுகிற நம்பிக்கை சங்கீதத் துறையில் ஈடுபட்டிருக்கிறவர்களில் சிலருக்காவது உண்டு. கோவில் கட்டுவதிலும், சிலைகள் செதுக்குவதிலும் ஆகமங்களின் ஆழ்ந்த ஞானத்தோடு தேர்ந்துள்ளவர்களுக்கு இன்றைய நம்பிக்கையும் குறைவு. நாளைய நம்பிக்கையும் இல்லை. நீடித்து நிற்கக் கூடிய ஒரு கலையை ஆள்கிறவனின் சொந்த வாழ்க்கை இந்த நூற்ருண்டில் எவ்வளவுக்கு உறுதியில்லாமல் போய்விட்டது பார்த்தீர்களா? கூடை முடைகிறவனுக்கும், பாய் பின்னுகிறவனுக்கும் இருக்கிற நாளைய நம்பிக்கை தலைமுறை தலைமுறையாக அழியாமல் நிற்கிற படைப்பைச் செய்கிறவனுக்கு இல்லாமல் போய்விட்டதென்று தெரியும்போது நமக்கு எவ்வளவு வருத்தமாக இருக்கிறது?

கலைகள் நேற்றிருந்த நிலையிலிருந்து இன்று எப்படி எப்படியோ மாறி வளர்ந்து பிழைத்துக் கொள்ளுகின்றன. ஆனுல் இந்த மாறுதலுக்கு ஏற்ப விரைந்து தங்களை மாற்றிக் கொள்ள முடியாத சில கலைஞர்கள் தளர்ந்து பின்தங்கி

நின்றுவிடுகிறார்கள். கலைத் துறையில் ஈடுபட்டிருப்பவனுடைய வாழ்க்கையில் பரிதாபத்துக்குரிய இடம் இப்படிப் பின்தங்கி விடுகிற சமயம்தான். கலைகள் தெய்வங்களைப் போன்றவை. ஒரு சிலர் வழிபடுவதை நிறுத்தி விட்டாலும் வேறு பலர் தங்களை எப்போதும் வழிபாடு செய்யும்படி ஆக்கிக் கொள்ளும் நிலையான கௌரவம் அவைகளுக்கு உண்டு. ஆனால் கலைத் தெய்வத்தை வழிபட்டுப் பயன் கிடைக்காமல் மனம் தளர்ந்த கலைஞர்களின் சொந்த வேதனைகளை யார் தவிர்ப்பது என்ற கேள்வி எழும்போதுதான் சிக்கலாயிருக்கிறது.

இந்தச் சிக்கல் முன்பு தகுதி வாய்ந்த ஆதரவுகளால் பேணப்பட்டு இன்று 'தன் உழைப்பே தனக்கு ஆதரவு' என்பது போல் கைவிடப் பட்டுள்ள எல்லாக் கலைஞர்களுக்கும் உரியதாகத்தான் இருக்கிறது. ஆனால் சிற்பக் கலையைப் போலப் பழக்கத்திலே அருகி அரிதாய்ப் போய் விட்ட சில கலைகளுக்கு இந்த மாறுதல் இழப்பைத்தான் கொடுத்திருக்கிறது என்பதில் வேறு விதமான கருத்துக்கு வழியே இல்லை. விக்கிரக வார்ப்பு, சிலை செய்தல் போன்ற அபூர்வமான கலைப் படைப்புக்களைக் காப்பாற்றுவதற்காகவாவது அந்தத் துறையைச் சேர்ந்த கலைஞர்களையும் நாம் காப்பாற்ற வேண்டும். எங்கும் கிடைக்காமல் போய் விட்ட சில அருமையான மூலிகைகளைத் தேடிக் கண்டு பிடிப்பது போல்தான் இன்று இந்தக் கலைகளில் வல்லவர்களைக் காண்பதும் அரிதாயிருக்கிறது. நாம் தேடிக் கண்டுபிடிக்கிற இரண்டொரு வல்லவர்களும் மேற்கண்டவாறு தங்கள் குறைகளை அலுத்துக் கொள்கிறவர்களாயிருக்கிறார்கள். குறைகள் இருக்கும் போது அவற்றை அலுத்துக்கொள்ளாமல் மறைத்துவிட்டு, 'நாகரிகமாயிருந்து' ஏமாற்றுவதும் நியாயமில்லைதான்.

அந்தக் கலைஞர்களுடைய பொறுமையையும் பெருந்தன்மையையும் சோதனை செய்வது போல் சமூகமும் அவர்களை விட்டு விடக் கூடாது. இன்று செழிப்பாயிருக்கிற பலகலைகளும் நாளை இதே நிலைக்குப் போய்விடலாம். கலைகளின்

நோக்கமும் பயனும் தலைமுறைக்குத் தலைமுறை மாறி விடுவது என்பது நாளைக்கும் உண்மைதான்.

கலையின் வேகத்துக்குக் கலைஞர்களும் ஈடு கொடுக்க முடியாமல் பின் தங்கி விடுகிறபோது அப்படிப் பின் தங்கி விடுகிறவர்களின் நாளைய நிலை என்ன என்பதைப் பற்றிச் சிந்தியுங்கள். உங்கள் சிந்தனைக்கு உடனே முடிவு கிடைத்து விடும் என்று நான் சொல்ல வரவில்லை. முடிவு கிடைக்கிற வரையில் இந்த விஷயத்தைப் பற்றிச் சிந்திக்க உங்களால் முடியவில்லை என்றாலும் யாராவது எங்காவது இதைப் பற்றியும் சிந்தித்துக் கொண்டிருப்பார்கள் என்பதை மட்டும் சொல்லி வைக்கிறேன்.

# மறுமலர்ச்சி எழுத்தாளர்களுக்கு

தமிழில் எழுத்தாளன் என்ற பதத்துக்குப் பொருள் விரிவு சொல்லும்போது எழுத்தாண்மை உடையவன் என்று பொருள் விரிவு சொல்லுவதா? அல்லது எழுத்தை ஆள்பவன் என்று பொருள் விரிவு சொல்லுவதா? இந்தப் பதம் மிகவும் பழமையானது என்பதைப் பற்றிச் சிறிதும் சந்தேகமில்லை. எட்டுத் தொகை நூல்களில் 'மதுரை எழுத்தாளன் சேந்தன் பூதன்' என்றொரு பெயர் காணப்படுகிறதே! கையெழுத்துப் போடுவதிலிருந்து கணக்கு எழுதுவது வரை எழுத்து எல்லோரையும் ஆள்வதைக் காண்கிறோம். ஆனால் எழுத்தை ஆள்கிறவனை எங்காவது எப்போதாவதுதான் காண்கிறோம். எழுத்தை ஆள்வதும் ஓர் ஆண்மை என்று ஒப்புக் கொள்ளத்தானே வேண்டும்?

பத்திரிகையாளன், நிருபர், ஆசிரியர் இவர்களிலிருந்து வேறானவன் எழுத்தாளன். எழுத்தாண்மையில் ஆசிரியத் தன்மையும் உண்டு. தமிழ் நாட்டைப் பொறுத்தவரை பாரதிக்குப் பின்பு ஏற்பட்ட புது யுகத்து எண்ணங்களைப் பிரதிபலிக்கிற எழுத்தை யார் யார் ஆள்கிறார்களோ அவர்

கள் அனைவரும் மறுமலர்ச்சி எழுத்தாளர்களே. மறுமலர்ச்சி எழுத்தின் யுகம் இன்னும் நிகழ்ந்து கொண்டு தானிருக்கிறது. இதனினும் புதிய மாறுதல் ஏற்படுகிறவரை நாளைக்கும் தொடர்ந்து நிகழ்கிற யுகம்தான் இது. இந்த மறுமலர்ச்சி யுகத்தில் எழுத்தாளர்களின் பொறுப்பு என்ன என்பதை எழுத்தாளர்களே வரையறுத்துக் கொண்டாலொழிய வேறு யாரும் கட்டளையிட்டோ அதிகாரம் செய்தோ வரையறுப்பதற்கில்லை. தங்கள் பொறுப்பைத் தாங்களே வரையறை செய்து கொண்டாலொழியத் தங்களைக் கட்டுப்படுத்த வேறெவரும் இல்லை என்பது போலச் சுதந்திரமாயிருப்பவர்கள் எப்போதுமே மிகவும் கவனமாயிருக்க வேண்டும். இப்படிப் பிறரால் கட்டுப் படுத்த முடியாத சுதந்திர முள்ளவர்களுக்கு இரண்டு மடங்கு பொறுப்பு உண்டு. தங்களைக் கட்டுப்படுத்திக் கொள்ள வேண்டிய பொறுப்பு ஒன்று. தங்களால் ஆளப் படும் துறைகளைக் கட்டுப்பாட்டோடு ஆள வேண்டிய பொறுப்பு மற்றொன்று. மிகவும் சுதந்திரமாக விடப்பட்ட வர்களுக்குத் தான் பொறுப்பும் மிகுதி. ஒரு தலைமுறையில் காவிய ஆசிரியர்களும், அறநூலாசிரியர்களும், புலவர் பெரு மக்களும் செய்த இலட்சிய இயக்கத்தை இன்று வேறுவித மாக நாம் செய்கிறோம் என்ற பெருமிதம் எழுத்தாளர் களுக்கு இருக்க வேண்டும். 'உயர்ந்த காரியத்தைச் செய் கிறவர்களாக நாம் இருக்கிறோம்' என்ற எண்ணமே ஒரு பொறுப்புத்தான்.

'பண்பு எனப்படுவது
பாடு அறிந்து ஒழுகல்'

என்று கலித்தொகையில் அழகாகச் சொல்லி வைத்திருக் கிறார்கள். இன்றைய மறுமலர்ச்சி எழுத்தாளர்கள் இதை அவசியம் ஞாபகம் வைத்துக் கொள்ள வேண்டும். இலக்கிய பாரம்பரியத்தின் பழம் பெருமை, புதுப்பெருமை எல்லாவற்றையும் கட்டிக் காக்கிற பொறுப்பு ஒவ்வோர் எழுத்தாளனுக்கும் உண்டு. பெருமை தன்னிடமிருந்து நழுவாமல் கட்டிக் காப்பதற்கு அப்படிக் காக்கிறவன்

ஒழுக்கமுள்ளவனாக இருக்க வேண்டும். இனிப்புத் தின் பண்டங்கள் எல்லாவற்றுக்கும் அவை எப்படி எப்படி எவ்வெவற்றால் செய்யப்பட்டாலும் இனிப்பு என்பது பொதுக் குணமாவதைப் போல் கலைகளுக்கு ஒழுக்கம் பொதுக் குணமாக நின்று காக்க வேண்டும். எழுத்தும், இலக்கியப் படைப்பும் கூட இதற்கு விதி விலக்கு இல்லை தான்.

## அறம் பிறழாத இலக்கியம்

ஓர் இலக்கிய ஆசிரியன் இறுதிவரை தன் எழுத்தின் இலட்சியங்களைக் காப்பாற்றிக் கொள்வது ஒரு பெண் தன் நிறைவைப் பாதுகாத்துக் கொள்வதைப் போல் அவசியமானதும், தவிர்க்க முடியாததும் ஆகும். எழுத்துக்குப் பண்டமாகிற பொருளோ சம்பவமோ எதுவாக வேண்டுமானாலும் இருக்கலாம். ஆனால் அதிலிருந்து விளைகிற சாரம் எந்த விதத்திலாவது சமுதாய நலனுக்குப் பயன் பட வேண்டும். அறம், அறமல்லாதது என்ற பிரிவுகளை இன்றைய நிலைக்கு ஏற்ப இப்படி வைத்துக் கொள்ள முடியும். சமுதாய நலனுக்குப் பயன்படுகிற இலக்கியம் எதுவோ அது அறம் பிறழாத இலக்கியம்; சமுதாய நலனுக்குப் பயன்படாத இலக்கியம் எதுவோ அது அறம் பிறழ்ந்த இலக்கியம் என்று புது விதமாகப் பார்ப்பதற்குப் பழகிக் கொண்டால் மிகவும் நன்றாயிருக்கும்.

கொலை கொள்ளைச் செய்திகள், பேதைத் தன்மையால் பெண்கள் வழி தவறுதல், இவைகளை வைத்துக் கதையும் இலக்கியமும் புனைகிறவர்கள் இன்று கூடுதலாயிருக்கிறார்கள். கதைகள் புனைவதற்கு இவை சம்பவங்கள் ஆகமாட்டா என்றோ, இப்படிப்பட்ட சம்பவங்கள் வாழ்க்கையில் இல்லை என்றோ, கூற முன் வரவில்லை. கொலை கொள்ளைச் செய்திகளைப் புனைகிற கற்பனை அதைப் படித்து முடித்ததும் அவற்றின் மேலும் அவற்றைச் செய்கிறவர்கள் மேலும் வெறுப்பு உண்டாக்குகிற அளவுக்காவது சமுதாய நலனுக்குப் பயன்

பட வேண்டும். பேதைத் தன்மையாலும், அனுதரவான சூழ்நிலையாலும், வழி தவறுகிற பெண்களைப் பற்றி எழுதப் படுகிற புனை கதைகள் அவற்றிலிருந்து தங்களைப் பாதுகாத்துக் கொள்ளும் துணிவைப் பெண்களுக்கு உண்டாக்குவன வாயிருக்க வேண்டும். அப்படி இல்லாமல் அந்தந்தக் கதைகளில் அவற்றின் தவறுதல் நிகழ்ச்சிகளே கவர்ச்சிகளாக அமையுமானல் எழுதுகிறவர்களின் பணி சமுதாய நலன் என்கிற பொது அறத்தை ஏதோ ஒரு வகையில் ஏமாற்றுகிற தென்றே வைத்துக் கொள்ள வேண்டும்.

செய்திப் பத்திரிகைகளை விரித்தால் வழி தவறிய நிகழ்ச்சிகளைப் பற்றிய பலவிதமான செய்திகள், வார, மாதப் பத்திரிகைகளை விரித்தால் வழி தவறிய மையக் கருத்துக்களையே தங்களுடைய கவர்ச்சிச் சாதனங்களாகக் கொண்டு பிறக்கும் கதைகள்,—இவற்றையெல்லாம் படித்து விட்டுப் பேசுகிறவர்களின் பேச்சில் வழி தவறுதல்கள்—என்று மொத்தமாகப் பார்க்கும்போது நல்லதை விளைவிப்பதற்காக விவரிக்கிற கெடுதல்களே நல்லதை விளைவிக்கத் தவறிக் கெடுதல்கள் என்ற அளவில் மட்டும் கவர்ச்சி நிறைந்தனவாய்த் தோன்றி விடுவது தெரிகிறது. எழுத்தின் இலட்சியம் பெண்ணின் நிறையுடைமையைப்போல் காக்கப் பட வேண்டியதென்று சொன்னேன்.

'ஒருமை மகளிரே போலப் பெருமையும்
தன்னைத்தான் கொண்டொழுகின் உண்டு'

என்று திருவள்ளுவர் பெருமைக்கும், பெருந்தன்மைக்கும் இலக்கணம் சொல்லியிருக்கிறுர். இன்றைய மறுமலர்ச்சி எழுத்தாளனுக்கும் இது பொருந்தும்.

## இரண்டு வினுக்கள்

'எதை எழுதுவது?'—என்ற கேள்வியைவிட 'எதற்காக எழுதுவது?' என்ற கேள்விதான் முக்கியமாக இருக்க வேண்டும். காளிதாஸனும், கம்பனும், இளங்கோவும் ஆயிரங்காலத்து வெள்ளத்தையும் நீந்திக் கொண்டு நிற்கும்

இலக்கியங்களைத் தந்திருக்கிறார்கள். 'எதற்காக எழுத வேண்டும்' என்ற கேள்வியிலேயே, 'எவ்வளவு காலம் நிற்கும்படி எழுத வேண்டும்?' என்ற கேள்வியும் உள்ளடங்கியிருக்கிறது. வாரத்துக்கு ஒரு முறை, மாதத்துக்கு இரு முறை, மாதத்துக்கு ஒரு முறை என்று பத்திரிகைகள் வெளி வருவதற்கு எல்லை வகுத்திருக்கும் தேதியும் கால அளவுமே அவற்றில் வெளிவரும் விஷயங்கள் நிற்க முடிந்த கால எல்லையாகவும் இருக்க வேண்டுமென்று இப்போது பலர் நினைத்துக் கொண்டால் அதற்கு யார் என்ன செய்ய முடியும்? எந்தச் சொற்களில் பிறக்கிறது? எவ்வளவு சத்தியமுள்ள மனத்திலிருந்து பிறக்கிறது? எதைப் பிறப்பிக்கிறது? இவை எல்லாவற்றையும் பொறுத்துத்தான் இலக்கியம் நிற்கிற காலம் அமைகிறது. செய்திப் பத்திரிகைகளைப் போலப் பிறந்து வெளியான சில மணி நேரத்துக்குள்ளேயே அழிந்து பழையதாகிப் போய் விடுகிற நிலைமை இலக்கியங்களுக்கும் ஏற்படலாகாது. அந்த அளவுக்குப் படைப்புக்களையும் படிக்கிறவர்களையும் மலிவாகக் கொண்டு போய் விட்டால் பின்னால் எப்பொழுதும் மாற்றி அமைக்கவே முடியாமல் போகும். 'இப்படித்தான் எழுத வேண்டும்' என்று கற்பனை எழுத்தாளர்களுக்கு யாரும் கட்டளை இடுவாரில்லை. அவ்வாறு கட்டளை இடுவார் யாரும் இல்லாததனால் தான் அவர்களுக்குப் பொறுப்பு அதிகம் என்று குறிப்பிட நேர்ந்தது. எழுத்தின் உயர்ந்த பண்புகள் எழுதுகின்றவனுடைய கற்பு. எழுத்தின் உயர்ந்த பக்குவங்கள் எழுதுகின்றவனுடைய வாழ்க்கையின் பண்புகள். எழுதுகின்றவர்கள் ஊர் நடுவில் கோபுரத்தைப் போல் எல்லாரும் காணும்படி பொலிந்து தெரிபவர்கள். அந்தக் கோபுரம் மங்கலமான காட்சியாகத் தோற்றமளித்துக் கொண்டிருக்க வேண்டுமென்று அக்கறை காட்டுவது தவறாகாது.

எனவே 'எதை எழுத வேண்டும்' என்பதைவிட 'எதற்காக எழுத வேண்டும்' என்பதைச் சற்றே அதிகமாக ஞாபகத்தில் பதித்துக் கொள்ளுவது அவசியமாகிறது. பாரதியைப்போல் ஒரு மொழியினுடைய நீண்ட வரலாற்

றில் ஒரு புதிய யுகத்தைப் படைக்கிற எழுத்தாளர்களையும் நாம் கண்டிருக்கிறோம். ஆனால் இன்று ஒரு யுகத்தின் நீண்ட வரலாற்றில் தாங்களும் மறைந்து போய்விடுகிற எழுத்தாளர்களைத்தான் அதிகமாகப் பார்க்கிறோம். நல்ல எழுத்துச் சமூகத்துக்கு மருந்து போன்றது. சமூகத்தில் உள்ளவர்களே இதை மறந்தாலும் எழுத்தாளன் மறக்கக் கூடாது. ஏனென்றால் எழுதுகிறவனுடைய பொறுப்புப் படிக்கின்றவனுடையதை விட அதிகம். நிச்சயமாக அதிகம்.

## மாணவ வாழ்க்கை

முன்பு ஆசிரியர்களின் வாழ்க்கை நிலையைப் பற்றிச் சிந்தித்தோம். சிறிய இடை வேளைக்குப் பின் இப்போது மீண்டும் மாணவர்களின் வாழ்க்கையைப் பற்றிச் சிந்திக்கப் போகிறோம். 'இன்று இந்தத் தேசத்தில் மாணவ வாழ்க்கையைப் பற்றிச் சிந்திக்க ஏதாவது இருக்கிறதா?'—என்று குறும்பு நிறைந்த கேள்வி ஒன்று செவிகளில் விழுகிறது. இந்தக் கேள்வியில் உள்ள குறும்பைப் பொருட்படுத்தாமல் கேள்வியை மட்டுமே பொருட்படுத்திக் கொண்டு சிந்திக்கலாம்.

'இன்று உருவாகிற மாணவர்கள் நாளைக்கு இந்தத் தேசத்தை நிர்வாகம் செய்யப் போகிறவர்கள் என்பதை மறந்துவிடக் கூடாது'—என்று பள்ளிக்கூடங்களின் ஆண்டு விழாக்களில் தலைமை வகிக்கிறவர்கள் வழக்கமாகச் சொல்லி வைக்கிற வாக்கியமும் அதன் பொருளும் பொய்யில்லைதான். ஆனால் மேடைகளில் பேசுவதைவிடவும் அதிகமாகக் கவலைப் பட்டுச் சிந்திக்க வேண்டிய பிரச்னை இது.

பள்ளி, கல்லூரிப் படிப்பும் அவற்றோடு இணைந்த ஹாஸ்டல் வாழ்க்கையும் பெரிய நகரங்களில் உள்ள 'போர்டிங் அண்டு லாட்ஜிங்' ஓட்டல்களைப்போல் மாறி

வருகின்றன. வசதியும் நவீன நாகரிக அமைப்புக்களும் உள்ள ஓட்டலில் தங்க இடம் கிடைப்பது அரிதாயிருப்பதைப் போலவே மருத்துவக் கல்லூரி, பொறியியற் கல்லூரி போன்றவற்றில் தங்கிப் படிக்க இடம் கிடைப்பதும் அரிதாயிருக்கிறது. மாணவ வாழ்க்கையின்போது அந்த வாழ்க்கை எதைக் கற்பதற்காக அர்ப்பணிக்கப்படுகிறதோ அதை அள்ளிப் பருகி விடுவது போன்ற தாகத்தோடு கற்க வேண்டுமென்று கற்கும் இலட்சணத்தைப் பற்றிச் சொல்லியிருக்கிறார்கள்.

'பருகுவன் அன்ன ஆர்வத்தன் ஆகி' என்று நன்னூல் ஆசிரியர் மாணவர்கள் எப்படி இருக்க வேண்டுமென்பதைப் பற்றி இலக்கணம் வகுக்கும்போது கூறுகிறார். 'பருகி விடுவதைப் போன்ற தாகமும், தவிப்பும்'—இன்று மாணவர்களைப் பொறுத்தவரை எந்தெந்தத் திசைகளிலோ மாறியிருக்கிறதே தவிர நிச்சயமாக ஒரே திசையில் இல்லை. ஆசிரிய வாழ்க்கை பெருமுனிவர்களின் புனிதமான இயக்கமாக இருந்த நிலையிலிருந்து இன்று 'டிரெயினிங்' முடிந்தவுடன் அடைகிற பதவியாக மாறிவிட்டாற்போல் மாணவ வாழ்க்கையையும் இன்ன பயனை எதிர்பார்த்து இத்தனை காலம் படிப்பது என்பதுபோல் மாறிவிட்டது. டாக்டராகத் தொழில் புரிய வேண்டுமென்றால் மருத்துவக் கல்லூரியில் சேர வேண்டுமென்றும், என்ஜினியராகத் தொழில் புரிய வேண்டுமென்றால் தொழில் கல்லூரியில் சேரவேண்டுமென்றும் பிற்காலத்தில் எப்படி வாழ்ந்து பிழைக்க வேண்டுமோ அப்படிக் கல்வியின் இலட்சியமும் மாறிப் போய்விட்ட நூற்றாண்டில் நாம் வாழ்கிறோம். பிழைப்பையும் வாழ்க்கையையும் வளர்த்துக் காப்பாற்றுகிற கல்வியை நம்முடைய மாணவர்கள் படிக்கிறார்களே ஒழிய மனத்தையும் பண்பாடுகளையும் வளர்த்துப் போற்றுகிற கல்வியைத் தேடித் தவிப்பதில்லை இந்த நூற்றாண்டில் மாணவ வாழ்க்கையின் நோக்கம் வேறு. பழைய நூற்றாண்டுகளில் மாணவ வாழ்க்கையின் நோக்கம் வேறு. இந்த அடிப்படை வேறுபாட்டை முதலில் நாம் உணர்ந்து கொள்ள வேண்டும்.

## மாறிய நோக்கம்

எழுத்தையும், மொழியையும், நூல்களையும் கற்கும் பயன் பழைய காலத்தில் எப்படி அளவிடப் பட்டிருக்கிறது என்று பார்க்கலாம்.

'எழுத்தறியத் தீரும் இழிதகைமை, தீர்ந்தால்
மொழித்திறத்தின் முட்டறுப்பானாகும்
—மொழித்திறத்தின்
முட்டறுத்த நல்லோன் முதல் நூல் பொருளுணர்ந்து
கட்டறுத்து வீடு பெறும்''

என்று இவ்வாறு கல்விக்கும், மாணவ வாழ்க்கைக்கும் முடிவான பயனாக மெய்யுணர்வு சொல்லப்பட்டிருக்கிறது. இன்று ஒரே நோக்கம் பின்னால் எப்படி வாழ்க்கை அமைத்துக் கொள்வது என்பதற்கு ஏற்ற தொழில் உணர்வுதான். 'என்ஜீனியரிங்' துறையில் படிப்பவர்களுக்குக் கலைத்துறைப் படிப்பைப் பற்றிய அக்கறை வேண்டியதில்லை போலவும், கலைத்துறையில் படிப்பவர்களுக்கு 'என்ஜீனியரிங்' பற்றி அக்கறை வேண்டியதில்லை போலவும் படிப்புக்கு எல்லை வகுத்துப் பாத்தி கட்டியிருக்கிற காலம் இது. மனத்தைச் சிறிது சிறிதாய் மலரச் செய்து மணக்க வைக்கிற மாணவ வாழ்க்கைதான் இலட்சிய மாணவ வாழ்க்கை. மாணவர்களின் கவனங்களை வேறு துறைகளில் கவர்ந்து பாழாக்கி விட முடியாதபடி தனியான மலைச்சாரல்களிலும் இயற்கையழகு மிக்க ஆற்றங்கரைகளிலும் (Rural Universities) நாட்டுப்புறப் பல்கலைக் கழகங்கள் ஏற்பட வேண்டும். தனிமையின் இனிமையில் ஈடுபட்டுக் கற்க வேண்டுமென்று தவிக்கும் மாணவர்களுக்கு அவை பயன்படும்.

பாரதி, தாகூர், போல் கவிகளையும், விசுவேசுவரய்யா, ஸி. பி. போல் மேதைகளையும் ஏ. எல். முதலியார் போல் மருத்துவ வல்லுநர்களையும், மறுபடியும் இந்த நாட்டுக்கு உண்டாக்கித் தருகிற சக்தி வாய்ந்த மாணவ வாழ்க்கை வேண்டும். வயிற்றை நிரப்பிக் கொள்ள ஹாஸ்டலும், ஆசிரியர்களை விதவிதமாய்க் கேலி செய்ய வகுப்பறைகளும்,

பறந்து கொண்டு தவிப்போடு போய்ப் பார்ப்பதற்கு ஏராள மான திரைப்பட அரங்குகளும் இருப்பதாக நினைத்துக் கொண்டு மிதப்போடு திரிகிற மாணவ வாழ்க்கை எந்த விதத்தில் இந்த நாட்டுக்குப் பயன்தர முடியும்? இன்றும் நாளையும், என்றும் இந்தப் பாரத புண்ணிய பூமியும் இதைத் தொழுது போற்றுகிற மற்ற நாடுகளும் பெருமை யோடு நோக்கத் தக்க மாணவர்களை நாம் உருவாக்க வேண்டும். நம்முடைய மாணவ வாழ்க்கையின் நோக்கங் கள் முற்போக்காக வளரலாம். ஆனால் ஒரு போக்கு மில்லாமல் தளர்ந்து சுருங்கிப் போய்விடக் கூடாது. ஓர் இந்திய மாணவனுடைய படிப்பு அவனுக்குச் சோறு போடு வதற்கு மட்டுமே பயன்பட்டு நின்றுவிடக் கூடியதன்று; அந்தப் படிப்பில்தான் அவனுடைய ஆன்மீக மலர்ச்சியே விளைய வேண்டும் என்ற அடிப்படையில்தான் பாரதத்தின் புராதனமான கல்வி முறையும், மாணவ வாழ்க்கையும் அமைக்கப்பட்டிருக்கின்றன.

## மனத்தின் ஒளி

சராசரி இந்திய மாணவனுடைய பள்ளிப் படிப்புக்கோ, கல்லூரிப் படிப்புக்கோ, இன்றைய நோக்கம் 'கிளார்க்' வேலையாக இருக்கலாம். ஆனால் நலிந்து போயிருக்கும் இந்த நாட்டின் இன்றைய சூழ்நிலையில் இலட்சிய மாணவர் களும் பலர் தோன்றி வளர வேண்டும். ஒவ்வொரு துறை யிலும் நாளைய பாரதத்துக்கு வல்லுநர்கள் தேவை. அந்த வல்லுநர்கள் இன்றைய மாணவ வாழ்க்கையிலிருந்துதான் நாளைய பாரதத்துக்குக் கிடைக்க வேண்டும். அப்படிக் கிடைக்க வேண்டுமானால் குழந்தைக்குத் தாய்ப்பால் வலிமை தருவதைப் போல் கல்வியோடு சேர்த்து நமது பண் பாடுகளையும், அவற்றின் மேல் நம்பிக்கை வளரும் வழிகளை களையும், கற்பிக்க வேண்டும். மாணவர்கள் தங்களுடைய மாணவ வாழ்க்கையை எப்படிப் பயன்படுத்திக் கொள்ள வேண்டுமென்று விரும்புகிறார்கள் என அவர்களுக்கே அதன் உரிமையைத் தருவதைக் காட்டிலும் இந்த நாட்டின்

மாணவ வாழ்க்கை எப்படி அமைந்தால் இதன் எதிர்காலத் துக்கு நல்லதோ அப்படி அதை அமைத்து விடுவதற்குப் பொறுப்புள்ள பெரியவர்கள் முயலவேண்டும். இதன் நோக்கம், மாணவர்களைக் கட்டுப் பெட்டிகளாய் ஆக்க வேண்டும் என்பதாகாது. இன்று விடுதலை பெற்று நிற்கும் இந்த நாட்டை என்றும் நல்லபடி காப்பதற்குத் தக்க பாது காவலர்கள் வேண்டுமே என்பதுதான் இந்தக் கவலையின் அர்த்தம். மாணவ வாழ்க்கையின்போது பறவைகள்போல் சுதந்திரமாகப் பறந்து கொண்டிருக்கலாம். ஆனால் எங்கே பறக்கிறோம், எதற்காகப் பறக்கிறோம் என்ற விவரம் ஒன்றுமே தெரியாமல் தறிகெட்டுப் பறக்கக் கூடாது. "இப்படித்தான் இருக்கிறோம்' என்று கட்டுப்பாட்டைப் புரிந்து கொண்டு மகிழ்ந்திருப்பது சுதந்திரமே ஒழிய, 'நாம் நமக்குத் தோன்றியபடி எப்படி வேண்டுமானாலும் இருக்க லாம்' என்று தான்தோன்றித் தனமாக இருப்பது சுதந்திர மாகி விடாது. அப்படித் தான்தோன்றித்தனமாக வளர்ச்சி பெற்ற முழு மனிதர்களே இருக்கக் கூடாது என்றால் மாணவர்கள் இருப்பது எந்த விதத்திலும் சாத்திய மற்றதுதானே?

வருங்காலத்தில் ஒப்பற்ற நவபாரத சமுதாயம் உரு வாகி வலிமை பெற்று நிற்பதற்கு இன்றைய மாணவர்கள் தாம் காரணமாக வேண்டும். தாங்கள் அந்த நல்ல எதிர் காலத்துக்குக் காரணமாகப் போகிறோம் என்ற ஞாபகம் மாணவர்களுக்கு மறந்து விடாதபடி செய்து கொண்டிருக் கிற அளவாவது நாம் பொறுப்பை நினைவூட்ட வேண்டும். இதைவிட வெளிப்படையாக எதுவும் விட்டுச் சொல்ல வேண்டியதில்லை. இன்றைய மாணவர்களுக்குத்தான் குறிப் புணரும் திறமை மிகவும் அதிகமாயிற்றே?

# பாரதி கண்ட பெண்மை

உலகத்தின் முதன்மையாகவும் சரி, இறுதியாகவும் சரி, பெண் வணக்கத்துக்குரியவள் என்பதை அநேகமாக எல்லாரும் ஒப்புக் கொள்வார்கள் என்று நினைக்கிறேன். சிந்தனைக்கு இதுதான் எல்லைப் புள்ளி என எதுவும் வரம்பு கிடையாது. ஆனாலும் எந்த இடத்திலாவது அது அழகாக வும் அளவாகவும் நிறைய வேண்டுமல்லவா? இந்த இடத்தில் பாரத நாட்டின் தாய்த் திருக்குலமாகிய பெண்களின் புதிய தலைமுறை வாழ்க்கையைப் பற்றிய சிந்தனையை நிறைவாகச் சிந்திக்கலாம்.

ஒரு நூற்றாண்டுக் காலத்துக்கு முற்பட்ட பாரத நாட்டுப் பெண்ணின் சமுதாய வாழ்க்கைக்கும் இன்றைய பாரத நாட்டுப் பெண்ணின் சமுதாய வாழ்க்கைக்கும் நடுவே எத்தனை எத்தனையோ மாறுதல்கள் உண்டு. ஒரு நூற்றாண்டுக் காலத்துக்கு முன்பு இந்த நாட்டுப் பெண்ணின் சமுதாய வாழ்க்கை மிகவும் சுருங்கிய எல்லைகளுக்கிடையே இருந்தது. இன்று அந்த எல்லைகள் ஓரளவு விரிவடைந் திருக்கின்றன என்பது எல்லார்க்கும் தெரிந்ததே. புதிய தலை முறையில் பெண்களின் நிலையைப் பற்றிச் சிந்திக்கிற இந்தச் சமயத்தில்தான் பெண்மைப் புகழ் பாடிய மகாகவி பாரதி யின் நினைவும் வருகிறது 'பெண்மை வாழ்கென்று கூத்திடு வோமடா' என்று பரந்த மனப்பான்மையோடு தாய்த்திருக் குலத்தை வாழ்த்திய கவியரசனை நினைத்துப் பெருமைப்பட இந்த நாட்டுப் பெண்ணினத்துக்குத்தான் அதிகமான உரிமை உண்டு. பாரதி பெண்களின் கட்சி பேசுகிற ஆண்மை வீரர். இப்படி அவர் பெண்களின் கட்சி பேசுகிற இரகசியத்தை அவருடைய கவிதைகளே பல இடங்களில் பறை சாற்றுகின்றன. பாரதிக்கு முன்பு மாபாரதக் கதை யைப் பாடிய அத்தனை கவிகளும் பாரதத்தின் எல்லாக் கதா பாத்திரங்கள் மேலும் சிறப்பாகப் பாண்டவர்கள் மேலும் கவனமும் கருணையும் செலுத்தியிருக்கிறார்கள். ஆனால்

மகாகவி பாரதி பாடிய பாஞ்சாலி சபதத்திலோ கவியின் கவனமும், கருணையும், எல்லாமே பாஞ்சாலியின் மேல் மட்டும் செலுத்தப்பட்டிருப்பதைக் காணலாம். இதிகாச கதாபாத்திரங்களில் பாஞ்சாலியைப் போலவே மகாகவி பாரதியின் அநுதாபத்துக்குரிய மற்றொரு பெண்ணும் உண்டு. அவள்தான் சகுந்தலை.

''ஆடை குலைவுற்று நிற்கிறாள்;—அவள்
ஆவென் றழுது துடிக்கிறாள்—வெறும்
மாடுநிகர்த்த துச்சாதனன்—அவள்
மைக்குழல் பற்றி இழுக்கிறான்''

என்று பாஞ்சாலிக்காகக் குமுறும் இதே மகாகவி சகுந்தலைக்காகவும் குமுறியிருக்கிறார். ஆனால் அந்தக் குமுறல் இப்படி வெளிப்படையாக அமையவில்லை. மிகவும் அந்தரங்கமாகவும், நாகரிகமாகவும் அது வெளிப்பட்டிருக்கிறது என்பதனைச் சுட்டிக்காட்ட முடியும்.

''சகுந்தலை பெற்றதோர் பிள்ளை சிங்கத்தினைத்
தட்டி விளையாடி—நன்று
உகந்ததோர் பிள்ளைமுன் பாரதராணி
ஒளியுறப் பெற்ற பிள்ளை''

என்று பாடி வைத்திருக்கிற இடத்தில்தான் எத்தனை குறும்பு பாருங்கள். பரதன், துஷ்யந்தன், சகுந்தலை, இருவருக்கும் பிறந்த குழந்தையேயானாலும் அந்தப் பிள்ளை சிங்கத்தைத் தட்டி விளையாடக் காரணமான வலிமையும் வீரமும் சகுந்தலையிடமிருந்து மட்டுமே அதற்குக் கிடைத்து விட்டதாகச் சொல்கிறவனைப் போல் 'சகுந்தலை பெற்றதோர் பிள்ளை' என்று கம்பீரமாக ஆரம்பித்த, கவிதைத் துணிவை இங்கு நாம் எந்த நல்ல சொற்களால் போற்றுவது?

## புதுமைப் பெண்

இப்படி இந்தத் தேசத்தின் பழைய தலைமுறைப் பெண்களை வணங்கிக் கூப்பிய இதே கைகளில்தான் புதிய தலை

முறைப் பெண்மையை வாழ்த்தும் புதுமைக்கவிதைகளும் உரு வாகிப் பிறந்தன என்பதை நாம் நினைவு கூர வேண்டும்.

'பெண்மை'—என்ற பதத்திற்குக் 'கண்ணுக்குப் புலனு வதோர் அமைதித் தன்மை'—என்று பழைய உரையாசிரியர் கள் விளக்கம் எழுதியிருக்கிறார்கள். ஆனால் மகாகவி பாரதி யின் இலட்சியப்படி புதுமைப் பெண் வீரமும், நிமிர்ந்த நடையும், நிலத்தில் எவர்க்குமே அஞ்சாத ஞானச் செருக் கும் உடையவளாக இருக்க வேண்டும்.

''முறத்தினால் புலியை ஓட்டும்
மொய்வரைக் குறப் பெண் போலத்
திறத்தினால் எளியை ஆகிச்
செய்கையால் உயர்ந்து நின்றாய்''

என்று மகாகவி பாரதியே பாடியிருப்பதைப் போல் திறத் தினால் எளியவளாய் இருந்து செய்கையால் மேல் எல்லைக்கு உயர்ந்து நிற்க வேண்டும் நவபாரதத்தின் இலட்சியப் பெண்.

'பெண்ணாகி வந்ததொரு மாயப் பிசாசம்' என்றும் 'நுண்ணறிவு உடைய நூலொடு பழகினும் பெண்ணறிவு என்பது பெரும் பேதைமைத்தே' என்றும் பாடி வைத்திருக் கிற இந்த நாட்டுப் ப்ழங் கவிகளின் புதிய பரம்பரையில் வந்த அதே மகாகவி பாரதிதான்,

''பெண்ணுக்கு அறிவை வைத்தான்
புவி பேணி வளர்த்திடும் ஈசன்
மண்ணுக்குள்ளே சிலமூடர்—நல்ல
மாதர் அறிவைக் கெடுக்கின்றார்.''

என்று பெண்ணறிவைக் குறை சொல்லும் பித்தர்களைச் சாடிக் கவி புனைந்தான். இந்தப் புதுயுகக் கவியின் முற் போக்கான நினைவுகளுக்கும் இந்த நாட்டின் பெண் குலம் எத்தனை நூற்றாண்டுகள் நன்றி சொல்லிக் கொண்டிருந்தா லும் ஏற்கும். சக்தி, பாரதராணி, பாரதத்தாய், என்று தேசத்தையும், இலட்சியங்களையும், சகலத்தையும் பெண்ணாக வழிபட்ட அற்புதமான மகா கவிஞன் பாரதி.

"ஜாதிகள் இல்லையடி பாப்பா—குலத்
தாழ்ச்சி உயர்வு சொல்லல் பாவம்."

என்று புண்ணிய பாவத்தையே சமூகத்திற்கு நன்மை தருகிற புதுக் கோணத்தில் திருப்பிப் பார்த்த சீர்திருத்த வீரன் பாரதி. மனித இனத்திலேயே சாதிப்பிரிவு பாவம் என்று கருதிய மறுமலர்ச்சிக் கவி, ஆண், பெண், என்ற சாதிப் பிரிவை அறிவின் மிகுதி குறைவுகளை வைத்து எடை போடு வான் என்று நாம் எதிர்பார்க்கலாமா?

## சீர்திருத்த நோக்கம்

'பாஞ்சாலிசபதம்' என்ற பழங்காப்பியக் கதையை எழு துகிறபோதே புதுமைப் பெண்ணுக்குத் தேவை என்று தான் கருதுகிற உரிமைகளைப் பாரதியால் அங்கும் சொல்லாமல் இருக்க முடியவில்லை. எதைப் பாடினாலும், எங்கே பாடினாலும், 'பெண்மை வாழ்க என்று கூத்திடும்' ஞாபகம் இந்தக் கவியின் இதயத்திலே மறவாமல் நிறைந்திருக்கிறதென்று நாம் உணர முடிகிறது. திரௌபதி சபை நடுவில் அவமான முற்று நிற்பதைப் பாரத தேசம் சுதந்திரமின்றி நிற்கிற நிலையாகக் கருதிக் கொதிக்கிறான் இந்த மகாகவி.

"பெண்ணொளி வாழ்த்திடுவார்—அந்தப்
பெருமக்கள் செல்வத்தின் பெருகுதல்போல்
கண்ணபிரான் அருளால்,—தம்பி
கழற்றிடக் கழற்றிடத் துணிபுதிதாய்
வண்ணப்பொற் சேலைகளாம்...அவை
வளர்ந்தன, வளர்ந்தன. வளர்ந்தனவே!"

என்று திரௌபதியின் துகில் அளவற்று முடிவற்று வளர்ந்து கொண்டே போவதைக் கூறவேண்டிய இடத்திலும் கூட ஞாபகமாகப் 'பெண்ணொளி வாழ்த்திடும் பெருமக்கள் செல்வம் பெருகுதல் போல்' என்று இந்தக் கவியினால் தன் இலட்சியக் கருத்தையே உவமையாகச் சொல்வதற்கு முடி கிறது. சுதந்திர இயக்கத்தையே, 'சுதந்திரதேவி வழிப் பாடாக' மாற்றிப் பெண்மைக்கு மரியாதை செய்த கவி யல்லவா நம் பாரதி?

"நன்றுபல் வேதம் வரைந்தகை பாரத
நாயகிதன் திருக்கை."—

என்று வேதங்களின் படைப்புப் பெருமையையே தேச மாதாவுக்குச் சார்த்தி மகிழ்கிற அளவு துணிவுள்ள கவி பாரதி. வந்தேமாதர கீதத்தில், 'குறுநகை இன்சொலார் குலவிய மாண்பினை' என்று அழகிய பெண்கள் நிறைந்திருப்பதையும் இந்தத் தேசத் தாய்க்கு ஒரு பெருமையாகச் சொல்லித் துதிக்கிறான் இந்தப் புதுயுகக் கவிஞன். மொழியையும், நாட்டையும், இயக்கத்தையும், எல்லாவற்றையும் தாய் மயமாகக் கண்டு, தமிழ்த் தாய், பாரதத் தாய், சுதந்திர தேவி, என்று உருவகங்களாலும் பெண்ணையே தொழுகிற இந்த உயர்வை வேறு எந்தக் கவியிடம் நாம் காண முடியும்?

'பீஜித் தீவிலே கரும்புத் தோட்டங்களிலே தமிழ்ப் பெண்கள் துன்பத்தினால் விம்மி விம்மி அழுகிற குரலை அந்தப் பக்கத்திலிருந்து வருகிற காற்றுவது கேட்டுக் கொண்டு வந்து சொல்லக் கூடாதா?' என்று கடல் கடந்து போய் வாழும் தாய்த் திருக்குலத்துப் பெண்களுக்காக ஏங்குகிறான் இந்தக் கவியரசன்.

"விம்மி விம்மிவிம்மி விம்மியழுங்குரல்
கேட்டிருப்பாய் காற்றே—துன்பக்
கேணியிலே எங்கள் பெண்களழுத சொல்
மீட்டு முரையாயோ—அவர்
விம்மியழவுந் திறங்கெட்டுப் போயினர்."

பெண்ணாக வந்ததொரு மாயப் பிசாசம்' என்று பாடியும் 'பெண்களைக் கண்ணெடுத்துப் பார்ப்பதே கேவலம்' என்று ஆஷாடபூதி வேடமிட்டும் அந்தப் பெண் வெறுப்புக் குணத்தினாலேயே பிறர் தங்களை மதிக்கும்படி செய்து கொண்டு வந்த நிலையை மாற்றிப் பெண்களின் துன்பத்துக்காகக் கண்ணீர் சிந்தும் ஒரு புதுயுகக் கவிஞனை இந்தப் பாடலில் பார்க்கிறோம். இதைச் சீர்திருத்த நோக்கம் என்று பாராட்டத்தானே வேண்டும்?

'திருமகளைச் சரண்புகுதல்'—என்ற பாடலில் திருமகள் எந்த எந்தப் பொருள்களில் வாசம் செய்கிறாள் என்பதைச் சொல்லத் தொடங்கிய பாரதி,

> ''பொன்னிலும் மணிகளிலும்—நறும்
> பூவிலும் சாந்திலும் விளக்கினிலும்
> கன்னியர் நகைப்பினிலும்''

என்று வளர்த்துப்போகிறார். 'பெண் என்பவள் மாயப் பிசாசு' என்று வறட்டு வேதாந்தம் பேசுகிறவர்களிடம், 'பெண்ணின் புன்னகையில்தான் திருமகள் வாசம் செய்கிறாள்' என்று பாடுகிற கவியின் வாக்கைச் சொல்லப் போனால் முகத்தைச் சுளிப்பார்கள். ஆனாலும் பாரதியைப் போல் ஒரு வீர மகாகவி இப்படிப் பெண்களைக் கண்டு பயந்து ஓடும் வறண்ட வேதாந்திகளுக்குச் சிறிதும் பயப்பட மாட்டானென்று நாம் நம்பலாம். துஷ்யந்தன் எத்தனையோ யுகங்களுக்கு முன் சகுந்தலையை மறதியால் ஏமாற்றியதைத் தன் யுகத்தில் தான் திரும்பநினைத்துப் பார்க்கும்போதே அந்தக் குற்றத்தைப் பொறுத்துக் கொண்டு துஷ்யந்தனை மன்னிக்க முடியாமல் வேதனைப் பட்டிருக்கிறான் மகாகவி பாரதி. எத்தனை மென்மையான மனம் இருந்தால் இப்படிக் கடந்த காலத்தில் மாண்டுபோன நல்லவர்களுக்காகவும் தன் காலத்தில் இரங்க முடியும் என்று சிந்திக்கும்போது நம்முடைய மகாகவியைப் பற்றி நமக்கு மிகவும் பெருமையாக இருக்கிறது.

> ''காதலினால் மானுடர்க்குக்
> கவிதை யுண்டாம்.''

என்று பாடிய கவியிடம் எவ்வளவு நளினமான உள்ளம் இருந்திருக்க வேண்டும். இவற்றையெல்லாம் பார்க்கப் போனால் தமிழ்நாட்டில் பெண்கள்தான் பாரதியை அதிகமாகப் படித்து மூழ்கி நன்றி செலுத்தக் கடமைப் பட்டிருக்கிறார்கள் என்று தோன்றுகிறது. ஆனால் படித்த பெண்களில் எத்தனைபேர் பாரதியை இரசித்துப் போற்றியிருக்கிறார்கள்? ஏதோ சிலர் இருக்கலாம். ஆனால் சிலர் மட்டும்

போதுமா? தமிழ் நாட்டுப் பெண்கள் பாரதிக்கு இப்போது செலுத்திக் கொண்டிருப்பதைவிட இன்னும் அதிகமான மரியாதை செலுத்தக் கடமைப் பட்டிருக்கிறார்கள் என்பதை மறுபடி ஞாபகமூட்டுகிறேன்.

''அன்னமூட்டிய தெய்வமணிக்கரத்தின்
ஆணைகாட்டில் அனலை விழுங்குவோம்''

என்று பாடிய வாய் தாய்க்குலத்துக்கு எவ்வளவு மரியாதை செய்திருக்கிறதென்று உணருகிறபோது நமக்கு மெய் சிலிர்க்கிறது. இந்தத் தேசமாதாவுக்குப் பிறந்த கவிப் புதல்வர்களில் ஒருவரென்ற முறையில் வங்காளிக் கவிஞராகிய தாகூரையும் கூடத் தன் வாக்கினால் பெருந் தன்மையோடு புகழ்ந்திருக்கிறான் பாரதி. ஆனால் தாகூரோ பாரதி என்று தன் காலத்தில் தெற்கே ஒரு கவி இருந்ததை நினைவூட்டவும் இல்லை. பெண்ணை உயர்வாக வழிபடுகிற இடங்களில் தாயாகவும் சக்தியாகவும், நளினமாக வழிபடுகிற இடங்களில் காதலியாகவும், நாடாக வழிபடுகிற இடங்களில் பாரத மாதாவாகவும், இயக்கமாக வழிபடுகிற இடங்களில் சுதந்திர தேவியாகவும் உருவகம் கண்ட மாபெருங் கவி பாரதி.

## கலையுமில்லை தொழிலுமில்லை!

"எழுத்து—கலையா? தொழிலா?''—என்ற விவாதத்திற்குப் பலர் பலவிதமாகத் தீர்வு கண்டிருக்கிறார்கள். சிலர் அது ஒரு கலைத் தொழில் (Cultural Work) என்று இருபுறமும் சார்ந்து தெளிவு கூறியிருக்கிறார்கள் தமிழகத்தில் நானறிந்த வரை அது முழுமையான அளவில் கலையாகவும் இல்லை. முழுமையான அளவில் தொழிலாகவும் இல்லை. பத்திரிகைகளைப் பெரும் முதல் போட்டு நடத்துகிற வர்கள் அதை ஓர் 'Industry (தொழில்) ஆகவே நடத்த விரும்புகிறார்கள் எனவே பெரிய பெரிய வியாபார ரீதியான பத்திரிகைகளில் அதை நடத்துகிறவரின் வியாபார மனப்பான்மையோடு ஒத்துத்தான் கலை

ஞர்களும் இயங்க வேண்டியிருக்கிறது. அதிகப் பணம் கொடுக்கிற—ஆனால் உயர்ந்த கலை இலட்சிய மில்லாத ஒரு பெரிய பத்திரிகைக்கு எழுத முன் வருகிற ஒரு பெரிய எழுத்தாளன் அதிகப் பணம் கொடுக்க முடியாத—ஆனால் அதே சமயத்தில் உயர்ந்த இலக்கியக் கலை இலட்சியங்களைக் காப்பாற்றுகிற சிறந்த சிறு பத்திரிகைக்கு எழுத முன்வருவதற்கே தயங்குகிறான்.

எழுத்தின் இரண்டு துறைகளாகிய பத்திரிகைகள், பதிப்பகங்கள், ஆகியவற்றில் வியாபார அடிப்படையோடு கூடிய தீவிரத் தொழில் மனப்பான்மைதான் இன்று இருந்து வருகிறது பத்திரிகைகள், அல்லது பதிப்பகங்களைக் கலை மனப்பான்மையோடு நடத்துகிறவர்களை—அல்லது நடத்த முன் வருகிறவர்களை யாரும் ஊக்கப் படுத்துவதுமில்லை; உற்சாகப் படுத்துவதுமில்லை. தொடக்கத்தில் கலை மனப்பான்மையோடு எழுத்துத் துறையில் ஈடுபடுகிறவர்கள், கூட நாளடைவில் தொழில் மனப்பான்மை அடைவதிலிருந்து தப்ப முடியாமல் போகிறது.

""எழுத்து கலையாக இருக்க வேண்டுமா? இருக்கக் கூடாதா? அல்லது தொழிலாக இருக்க வேண்டுமா? தொழிலாக இருக்கக் கூடாதா?''- என்பதன்று என் விவாதம்! நடை முறையில் இங்கு இன்று எப்படி இருக்கிறது என்பதை வைத்தே நான் விவாதிக்கிறேன்.

""நமக்குத் தொழில் கவிதை''—என்ற கவிதைத் தொடரில் பாரதி எந்த நல்ல பொருளில் 'தொழில்' என்ற பதத்தைப் பிரயோகித்தானோ அந்த நல்ல பொருளில் தொழில் என்ற பதத்தை இங்கு நான் பிரயோகிக்க வில்லை. அந்த நல்ல அர்த்தத்திலேயே 'தொழில்' இங்கு இருக்குமானால் அப்புறம் இப்படி ஒரு விவாதமே அவசியமில்லை. அப்படி நல்ல அர்த்தத்தோடு கூடிய 'தொழிலே' ஒரு கலையாகி விடுகிறதுதான், இங்கேயோ தொழிலின் கலை மதிப்பே அது பெறுகிற இலக்கியத் தரத்தினால் கணிக்கப் படாமல் அது அடைவிக்கிற பணத்தினால் கணிக்கப்படுகிறது; மதிக்கப்படு

கிறது. ''பத்தாயிரம் பரிசு பெற்ற கதை—நூறு ரூபாய் சன்மானம் பெற்ற சிறுகதை''—என்றெல்லாம் அல்லவா சராசரித் தமிழ் வாசகன் இலக்கியத்தைப் பற்றி பேசி மதிக்கிறான்! இலக்கியப் படைப்பைக் கலையாகக் கருதிச் செயல்படும் முயற்சிகள் பெருந்தன்மையோடு வெளிச்சத்துக்குக் கொண்டு வந்து காட்டப்பட்டுப் புகழுறும் நிகழ்ச்சிகள் இங்கு மிகவும் குறைவு. அரசியல் பொருளாதாரப் பிரச்னைகளால் எதையும் அது பெறுகிற பணத்தை வைத்தே மதிக்கக் கற்றுக் கொடுத்திருக்கின்றன தமிழனுக்கு இந்தத் துறையில் நம்மவர் மனப்பான்மை இன்னும் சிறு பிள்ளைத்தனமாகவே இருக்கிறது. இந்த மனப்பான்மை மாறிய பிறகே இப்படிப்பட்ட விவாதங்களுக்குக் கூட ஓர் இலக்கிய அந்தஸ்துக் கிடைக்க முடியும்.

ஒரு பத்திரிகையின் தொழில் ரீதியான வெற்றி — பல பத்திரிகைகளால் காப்பியடிக்கப் படும் ஆட்டுமந்தை மனப்பான்மையைக் கலை என்பதா? அசல் இலக்கியத்துக்காகத் தவித்துப் போராடும் சிறிய இலட்சியப் பத்திரிகைகளையும் இலட்சிய எழுத்துக்களையும் பற்றி அறியாமலே—தங்கள் ஏ—பி.சி. சர்டிபிகேட்களில் புள்ளிவிவரம் நிறுவுவதைப் பற்றியே கவலைப்படும் பத்திரிகை அதிபர்களைக் கலைஞர்கள் என்பதா? அவற்றில் இயந்திர வேகத்தில் உழைப்பவர்களைக் கலைஞர்கள் என்பதா? அநுபவங்கள் நேர் மாறாக இருக்கும் போது கலை, தொழில் என்ற பதங்களை மட்டும் வைத்து நாம் எதை விவாதிக்க முடியும்? இந்தப் பதங்களுக்குரிய சுயமான அர்த்தத்தை முதலில் நாட்டில் தேடுவோம்? பின்பு விவாதிப்போம் என்று நான் கூறினால் யாரும் கோபிக்கக் கூடாது எந்த விவாதத்திலும் காரண காரிய அநுமானங்களை விடப் பிரத்யட்ச நிலைமைக்கு முக்கிய இடம் உண்டு.

'மோசமான உடையை நெய்கிறவனுக்குச் சமுதாயத்தில் மதிப்பு இருக்காது'—என்கிறார்கள் மோசமான ஆடையை நெய்கிறவனுக்கும் இன்று தொழில் ரீதியில் மதிப்பு இருக்கிறது. மதிப்பு இருக்கக் கூடாது என்று நாம் கருதுகிறோம். ஆனால் மோசமான ஆடை, மோசமான எழுத்து, மோச

மான பத்திரிகை, மோசமான புத்தகம், எல்லாவற்றுக்கும் மதிப்பு இருக்கிறது என்பது பிரத்தியட்சம். பிரத்தியட்சம் இப்படி இருக்கும்போது அநுமானங்களை வைத்து மட்டுமே நாம் விவாதிப்பதால் என்ன பயன்? பிரத்யட்சத்தை வைத்து விவாதிக்கப் புகுந்தால் பாரதி 'தொழில்' என்று கூறிய அர்த்தத்திலும் இன்று எழுத்தோ இலக்கியமோ தொழிலாக இல்லை. நாம் 'கலை' என்று கருதுகிற அர்த்தத்தில் அது கலையாகவுமில்லை. கலையாக இருக்க வேண்டுமென்று நாம் ஆசைப்படுகிறோம், சந்தர்ப்பமும் சூழ் நிலைகளும் அதைப் பெரும் வியாபாரமாக மாற்றிக் கொண்டு வருகின்றன. அதிகமானவர்களால் படிக்கப்படும் மோசமான இலக்கிய ஆசிரியன் குறைவானவர்களால் படிக்கப் படும் நல்ல இலக்கிய ஆசிரியன் தன்னைவிடக் கீழானவன் என்றெண்ணிப் பொய்ப் பெருமித மடைகிற பிரத்யட்சத்தை இங்கே நாம் காணுகிறோம். அதிகமாகப் பணம் வாங்கி மோசமாக எழுதும் எழுத்தாளன் ஒருவன் குறைவாகப் பணம் பெற்று நன்றாக எழுதும் ஒருவனைத் தன்னினும் குறைவாக எண்ணிப் போலிக்கர்வம் அடைகிறான். இப்படிப் பட்ட பிரத்யட்சத்தில் விவாதிப்பதற் குரிய ஒரு சூழ்நிலை கூட இல்லை. ஏனென்றால் பாரதி கூறியது போன்ற 'தொழி லாக' எழுத்தை ஆக்கிவிட நம்மில் சிலர் அவாவுகிறோம். அது ஒன்றைத்தான் காரணமாகக் கூற முடியும்.

## வளரும் இசைக்கலை

நான்கைந்து ஆண்டுகளாக இசைக்கலை தமிழகத்தில் நல்ல வளர்ச்சியும் முன்னேற்றமும் பெற்று வருவது கண்கூடு. அக்கலையில் ஆர்வமும் ஊக்கமும் கொண்டு பயிலுவோர் தொகையும் நாளுக்கு நாள் பெருமை அடைந்து வருகிறது. இசையை விரும்பிச் சுவைக்கும் சுவைஞர் தொகையும் மிகுதி யடைகின்றது. இசையியல் தெரிந்து அதனைப் பயிற் றும் இசைப் பேராசிரியர்களும், இசைக் கல்லூரிகளும். கழ

களும் அத்துறையிற் செய்துவரும் பணி அளப்பரியது. இதே வளர்ச்சியும், கலைத்திறனும், சுவை விருப்பும், பழந் தமிழ் நாட்டில் இருந்தன. நாடகம், இசை முதலிய நுண் கலைகளைப் பழந்தமிழர் போற்றிப் பேணிப் பாராட்டிப் பெரு விருப்போடு சுவைத்து வந்த காலம் ஒன்று இருந்தது. இசைக் கலையைப் பகுதி பகுதியாகப் பிரித்து நுண்ணியதாக ஆராய்ந்து, இவை குணம், இவை குற்றம், இவை இலக்கணம், இவை வழு, என அக்கலைக்கு நிலையான வரையறைகள் கண்ட பெருந்திறன் பழந் தமிழர்க்கு இருந்துள்ளது. அதனைத் துணைக் கொண்டு நோக்குங்கால் அவர்தம் உயர்ந்த பண்பாடும் வாழ்கையும், வாழ்க்கையைச் சூழ்ந்து நிற்கும் கலைகளை அடிப்படையாகக் கொண்டே கருக்கொள்ளத் தொடங்குகின்றன என்பது அறிஞர் துணிபு. பழந்தமிழர்கலை வாழ்க்கை இத்துணிபுடன் சற்றும் முரணாத ஒன்றாக அமைந்திருந்தலை வெளிப்படையாக அறியலாம். இசைக்கு இது இலக்கணம், இது குற்றம் என்ற வகுப்புண்மையைத் தமிழ் நூற்றுணை கொண்டு விளக்க முடியும். பதினொரு வகைப் பாடல் நெறிகளைப் பழந்தமிழர் மேற் கொண்டுள்ளனர். ஒவ்வொரு நெறியும் அமைந்த முறை துறைகள் வேறுபாடுடையன. இசை மரபு என்னும் பழந்தமிழ் இசை நூலில் அப் பதினொரு வகைப் பாடல்களையும் கீழ்க்கண்டவாறு கூறுகிறார்.

''உள்ளாளம் விந்துவுட னாதமொலி யுருட்டுத்
தள்ளாத தூக்கெடுத்தல் தான்படுத்தல்-
கருதி நலிதல் கம்பித்தல் குடிலம் [மெள்ளக்
ஒருபதின்மேல் ஒன்றென் றுரை''

(1) உள்ளாளம், (2) விந்து, (3) நாதம் (4) ஒலி, (5) உருட்டு, (6) தூக்கு, (7) எடுத்தல், (8) படுத்தல், (9) நலிதல், (10) கம்பித்தல், (11) குடிலம்.

இப் பதினொரு வகைப் பாடல் நெறிகளிலும் உள்ளாளப் பாடல் நெறி தலைசிறந்தது. இசை பாடுவார்க்கு இன்ன வின்ன குற்றங்கள் ஆகா என வரையறுத்துக் கூறும் இலக்கண அமைப்பை உடையது. உள்ளாளப் பாடல் நெறியின்

ருந்து நாமறியும் இசையியல்பு நுணுகியதொரு பேருண்மை யாக அமைகிறது. தற்கால இசைவாணர்களிற் பெரும்பா லோரிடத்தில் நாம் காணுகின்ற ஒரு பெரிய குறை என்ன வென்றால், 'அங்க அசைவுகள்' என்றுதான் சொல்ல வேண் டும். உயர்ந்த இசையின்பத்திற்குரிய சுவை நுகர்ச்சியை இவ் வங்க அசைவுகள் ஓரளவு பாதிக்கத்தான் செய்கின்றன. பாடுகின்றவர் தரத்தில் உயர்ந்த இசையைத் தேனுக உருக்கி இழைத்துப் பாட்டாகப் பாடி, அவையில் உள்ளவர் களைக் கவர முயன்றாலும் அவரிடத்தில் உள்ள மிகச் சிறிய தவறாகிய அங்க அசைவால் அக் கவர்ச்சி ஏற்படாமற் பாழ் பட்டு விடுகிறது. அங்க அசைவால் தோன்றுகின்ற சிறிய நகைச்சுவை பெரிய இசைச் சுவையைத் தலையெடாவண்ணம் கீழ்ப்படுத்தி விடுகிறது. இசைவாணரிடம் சுவைப்பவன் உண்மையான சுவையைக் காண வேண்டுமானால் கடவுளி டம் அடியானுக்கு ஏற்படுகின்ற பாசம் அவனுக்கு இசை வல்லூநரிடம் ஏற்பட வேண்டும். சுவைப்பவன் இசைப் பவனுடைய அதிமனித ஆற்றலிற் கலந்துள்ள தெய்வத் தன் மையை உணர்ந்தாலொழிய உண்மையான இரசனை தோன்றுவதற்கு இடம் ஏற்படாது. யானறிந்த இசைவாண ரொருவர் இங்கே எடுத்துக்காட்டாக அமையத் தக்கவர். பாட ஆரம்பித்தவுடன் குடுமி முடியவிழ்ந்துவிடும். கண்கள் காதுவரை வலித்துக் கொண்டு செல்லும். புருவம் நெற்றி யோடு போர் செய்யும். கழுத்து விம்மி விம்மி நெஞ்சுக்குழி தெரிவதும், புடைப்பதுமாக இருக்கும். இடை இடையே பலாச் சுளைப் பற்கள் ஒரு வெடிச் சிரிப்பை ஒலியின்றி வெளிக் காட்டும். உடல் ஆடும் ஆட்டமோ சொல்ல வேண்டியதே இல்லை. ஆரோகண கதிகளை அவையினர்க்கு விளக்குவதாக எண்ணமோ, என்னவோ? ஒரு கை மேலே போகும், மற் றொரு கை கீழே அங்கவஸ்திரத்தைத் திருகிக் கொண்டிருக் கும். முன்னே பருத்தெழுந்த தொந்தியின் அவஸ்தை வேறு. இப்படிப்பட்ட இலட்சணங்களுடன் அவர் பாடினால் அந்த இசையின் தெய்வீகத் தன்மை என்ன ஆகும்? அது வெறும் இசையாக மட்டுமா இருக்கும்? நடனம், நடிப்பு, தேகப்

பயிற்சி முதலிய எல்லாம் கலந்த ஒரு கதம்பமாக அல்லவா இருக்கும்! இத்தகைய இசைக் குற்றங்கள் சிறிதும் வராமற் பாடுவதுதான் உள்ளாளப் பாடல் முறை. காந்தருவதத்தை வீணையுடன் வாய்ப்பாட்டும் பாடிய கலைத் திறத்தைச் செய்யுளிலே விளக்கமாக சித்திரிக்க வந்த சீவக சிந்தாமணி ஆசிரியர்,

''கருங்கொடிப் புருவமேரு கயல் நெடுங் கண்ணுமாடா
அருங்கடி மிடறும் விம்மா(து) அணிமணி எயிறுந் தோன்ரு
இருங்கடற் பவளச் செவ்வாய் திறந்திவள் பாடிஞளோ
நரம்பொடு வீணை நாவின் நவின்றதோ என்று நைந்தார்''

(சீவக சிந்தாமணி - 658)

மிடறு—கழுத்து; எயிறு — பல்.

என்று அவையிற் கூடியிருந்தார் வியக்கும் வண்ணம் பாடினுள் என்பதை விளக்கிஞர். சிந்தாமணிக்கு உரைகண்ட நச்சிஞர்க்கினியர் இச்செய்யுளின் உரையில் இசை நூல் மேற்கோளுடன் பாடல் நெறிகளை எடுத்துரைத்து அவற்றுள் உள்ளாளப் பாடல்நெறியின் சிறப்பையும் விளக்கிக்கூறிஞர். உள்ளாளப் பாட்டுப் பாடுகின்றவர்கள், 'இடை பிங்கலையை இயக்க மறுத்து மூலாதர முதல் பிரமரந்திரமளவும் இயக்கம் ஆக்கி நடுவு தொழில் வரப் பாட வேண்டும்' என்பது நச்சிஞர்க்கினியர் விளக்கம்.

''கண்ணிமையா கண்டந் துடியா கொடிறசையா
பண்ணளவும் வாய்தோன்ரு பற்றெரியா—எண்ணிலவை
கள்ளார் நறுந்தெரியற் கைதவனே கந்தகுவர்
உள்ளாளப் பாட லுணர்.''

(கொடிறு—கன்னம்)

என்பது இப் பாடல் நெறிக்கு 'இசை நூல் மரபு' கூறும் இலக்கணம். திருவிளையாடற் புராணம் விறகு விற்ற படலம், சிந்தாமணியில் மீண்டும் விமலையாரிலம்பகம் முதலிய பகுதிகளில் இசை பாடுவோர்க்கு ஆகாத குற்றங்களாக இவை விவரிக்கப் படுகின்றன.

நாளுக்கு நாள் கலைத்துறையில் முன்னேறி வருகின்றது தமிழ் நாடு. இசைவாணர்கள் தங்களுக்காக இவைகளை மாற்றிக்கொள்ள விரும்பாவிடினும், இசைக் கலையின் தூய்மை யொன்றே குறிககோளாகக் கொண்டாவது இவைகளை மாற்றிக் கொண்டுதான் ஆகவேண்டும். 'இசை தெய்வீகத் தன்மை பொருந்திய தொரு கடவுட்கலை என்பதை மறுப்பார் யாருமில்லை. அதன் தெய்வீகத் தன்மை இவை போன்ற சில சில்லறைக் குற்றங்களால் பாதிக்கப் படுமாயின் அது மிக வருந்த வேண்டிய ஒன்ருகும். இது போலவே பழைய தமிழ் நூலுரைகளில் அரிதும் பெரிதுமாக அகப்படும் சில நல்ல கருத்துக்களை அவ்வக் கலைத்துறையிற் சிறந்தார் ஏற்றுப் போற்றி ஆராய்ந்து பயன்படுத்துவது அவசியம். இசை, நடனம், நாடகம் முதலியவைகளைக் கூறும் நூல்கள் தமிழில் இருந்திருக்கின்றன. நம் காலத்துக்கு முன் அவை கெட்டன போலும். அவைகளிலிருந்து கிடைக்கும் சில பல கருத்துக்களுக்கு இன்னும் பஞ்சமில்லை. ஆனுல் அக் கருத்துக் களைத் தேடிக் காண முயல வேண்டும்.

## மெல்ல மறையும் ஒரு தலைமுறை

நமது கலைகள், அறங்கள், மொழியறிவு தொடர்பான துறையினர், பத்திரிகையாளர்கள், அரசியல்வாதிகள், நடிகர்கள், தொழில்நுட்ப வினைஞர்கள், ஆகியவற்றின் இடையேயும், ஆகியவர்கள் இடையேயும் அண்மைக் காலத்தில் ஒரு நுணுக்கமான மாறுதல் தெரிகிறது. உழைக்கும் சக்தியும், ஞாபக ஆற்றலும், தவறுதலுக்கு நாணும் சுபாவமும் உள்ள ஒரு பழைய தலைமுறை குறைந்து வருவதைக் காண்கிறேம். முயற்சியில் சலிப்பு அடையாமை, கடின உழைப்பின் மூலம் முன்னுக்கு வருதல், பேராசை படாமை, போன்ற பழைய நாட்டுப்புறத்து நல்ல குணங்களை இன்றைய நாகரிக மனிதர்கள்பாலோ, நகரப்புறத்தவர்பாலோகூட

அபூர்வமாகக் காண முடிகிறது. நம்பிக்கையில், வாக்கு நாணயத்தில், உழைப்பில், படிப்பில், தொழிலில், எதிலும் 'பக்கா'வாக இருந்த ஒரு தலைமுறை மெல்ல மெல்ல மறைந்து எதையும் ஓரளவு சமாளித்துக் கொள்ளவும், சரி செய்துகொள்ளவும் முடிந்த ஒரு தலைமுறை உருவாகிக் கொண்டிருக்கிறது. இது மிகவும் 'சோனி'யான தலைமுறை.

எதிலும் மிக விரைவில் சலிப்பு அடைந்து விடுவதும், கொஞ்ச உழைப்பில் அதிகம் சம்பாதிக்க ஆசைப்படுவதும் மிக்க மனிதர்களை இந்தத் தலைமுறையில் அதிகமாகப் பார்க்கிறோம். எங்கும் எதிரே பார்க்கிறோம்

அற நூல்களிலும், மரபுகளிலும் அசைக்க முடியாத நம்பிக்கையோடு பிறர்க்குத் தீங்கு செய்ய அஞ்சியும் தனக்கு மட்டுமே நன்மை தேட' நாணியும் இருந்த ஒரு தலைமுறை மெல்ல மெல்ல மறைந்து வருகிறது இந்நிலை ஒரு துறையில் மட்டுமல்ல; பல துறைகளிலும் இதே நிலைமைதான் எதிரே தெரிகிறது.

## கலைகள்

சங்கீதம், சிற்பம், நடனம், முதலிய கலைகளை நோக்கும் போது இந்த மறைவும் இழப்பும் சற்று அதிகமாகவே தெரிகிறது. மார்பளவு தண்ணீரில் நின்று குரலினிமைக்காக அசுர சாதகம் செய்யும் வித்வான் இனிமேல் அபூர்வமானவர்தான். அரியக்குடி, எம் எஸ்., சித்தூர் சுப்பிரமணிய பிள்ளை, மதுரை மணி, டி. கே. பட்டம்மாள், போன்ற கர்நாடக சங்கீத ரத்னங்களுக்குப் பிறகும் ஒரு சீரான திறமையும், நம்பிக்கையும் உள்ள ஒரு தலைமுறை இருக்காது இனி.

இறுகிய கருங்கல்லைச் செதுக்கி நரம்பும் தெரியும் உயிர்த் துடிப்புள்ள சிற்பங்களை உருவாக்கும் தலைமுறையும் மெல்ல மெல்ல மறைந்து வருகிறது கல்லில் வேலை செய்யும் சிற்ப ஸ்தபதிகளின் குடும்பங்கள் விரல்விட்டு எண்ணக் கூடிய நிலையில்தான் தமிழ் நாட்டில் இன்று மீதமிருக்கின்றன. ஒவ்வொரு தூணில் ஓர் இசை ஒலி எழும்படியான சப்தசுவர

இசைத் தூண்களைச் செதுக்கும் சிற்பிகள் இன்று இல்லவே இல்லை. கல்லில் உழைக்க விரும்பும் ஆற்றல் மிகுந்த தலைமுறை மெல்ல மெல்லப் போய்க் கொண்டிருக்கிறது. போட்டோ எடுக்கத் தெரிந்த பின் சித்திரம், சிற்பம் எல்லாம் தளர்ந்துவிட்ட துறைகள் ஆகிவிட்டனவோ என்னவோ?

அதே போல பஞ்ச லோகச் சிலை வார்ப்புச் (ஐம்பொன் கலவை) செய்யும் ஸ்தபதிகளும் அருகி வருகிறார்கள். புல்லாங்குழல், நாகசுரம், கோட்டு வாத்தியம், வீணை எல்லாவற்றிலும் ஓரோர் அரிய திறமை வாய்ந்த அணிதான் இன்னும் மீதமிருக்கிறது. நடனத்திலும் அந்த நிலைதான். சிறுபான்மை அணி ஒன்றே மீதமிருக்கிறது.

ஓர் ஊரில் முன்பு இரண்டு பெட்ரோல் பங்க் இருந்தால் இப்போது ஆறு இருக்கிறது. மூன்று தியேட்டர் இருந்தால் இப்போது ஒன்பது இருக்கிறது. ஒரு பள்ளிக்கூடம் இருந்தால் இரண்டு இருக்கிறது. அபூர்வமான துறைகளைச் சேர்ந்த கலைஞர்கள் மட்டும் ஏனோ இந்த விகிதாசாரத்தில் பெருகவில்லை. சுதந்திரத்திற்குப் பின் நாம் அடைந்த வளர்ச்சியில் எங்கோ எதிலோ கோளாறு இருக்க வேண்டும். நமது நாட்டின் தனித்திறமைகள், தொழில் நுணுக்கங்கள், மரபுகள், எவை எவையோ அவற்றை சார்ந்தவர்களின் வாரிசுகள் சுதந்திர இந்தியாவில் நலம் பெறவில்லை. எதனால் என்பது ஆராய்ச்சிக்குரியது.

## அறங்கள்

தர்ம, அதர்மங்களைப் பற்றிய நம்பிக்கையில் ஆழ்ந்தவர்கள் கூட குறைந்து வருகிறார்கள். அறஞ் செய விரும்பு. ஆறுவது சினம், எனக் கற்றும் கற்பித்தும் நம்பிய தலைமுறையிலிருந்து இன்றைய மக்கள் வெகுதூரம் விலகி வந்து விட்டவர்களைப் போல் தோன்றுகிறார்கள். உண்மையில் நம்பிக்கை இழந்துவிட்ட பத்து பேருக்கு நடுவில் சத்தியத்தைப் பற்றிப் பேசுகிறவன் மட்டும் பழைய தலைமுறையைச்

சேர்ந்தவனுகச் சுட்டிக் காட்டப்படுகிறுன். பாவ புண்ணி யங்களின் நம்பிக்கை இழந்துவிட்ட பத்து பேருக்கு நடுவே அவற்றில் நம்பிக்கையுள்ள ஒருவன் இடையூறுக தோன்று கிறுன். மாறி வரும் கால நிலேகளேப் பார்க்கும்போது பேராசையும், பரபரப்பும் நிறைந்த சூழ்நிலேகளின் நடுவே நிதானமும், உண்மையும், திருப்தியும் இடையூறுகளாகவே தோன்றத் தொடங்கி விட்டன. தொந்திரவுகளாகவும் கருதி பலர் இவற்றை ஒதுக்கத் தொடங்கி விட்டனர்.

நிஜம் சொல்லி வியாபாரத்தில் லாபம் சம்பாதிக்க முடியாதென்று தோன்றவே நிஜம் சொல்லி வியாபாரம் செய்யும் தலேமுறை மறையத் தொடங்கி விட்டது.

நிஜம் சொல்லி எளிமையாகவும், சத்தியமாகவும் நடக் கும் நல்ல அரசியல்வாதிக்கு வெற்றி இல்லாமல் போகவே நிஜமும் எளிமையுமுள்ள அரசியல்வாதிகளின் தலேமுறை மறையத் தொடங்கி விட்டது.

மெய்யான உண்ணுவிரதத்துக்கு மதிப்பில்லாமல் போகவே ப்லாத்கார வழிகள் வளரத் தொடங்கி அசல் உண்ணுவிரதிகளின் தலேமுறை மறையத் தொடங்கியிருக் கிறது.

படிப்பில் மட்டுமே கவனம் செலுத்தி ஒழுக்கமாகவும் அடக்கமாகவும், வாழும் மாணவன் முன்னுக்கு வரவும் திடீர் தலேவனுகவும் முடியவில்லே என்பதனுல், அடக்க ஒடுக்கமும் நிறைந்த மாணவர் தலேமுறை மெல்ல மெல்ல (ஏன்? கொஞ்சம் வேகமாகவே) மறைந்து வருகிறது. அறம் தொடர்பால் மதிப்பீடுகளுக்கு *(Values)* மரியாதையே மெல்ல மெல்ல மறையத் தொடங்கியிருக்கிறது. எல்லாத் துறையிலும் பூஞ்சையான, சோனி தட்டிப்போன ஒரு ஹிப்பிகள் கூட்டம் மெதுவாக உருவாகி வருகிறது. நன்றி யுடைமை, விசுவாசம், நட்பு, பணிவு, எல்லாம் பழம் பண்டங் களாகக் கேலி செய்து ஒதுக்கப்படும் நிலேமையைக் காண் கிறேம். சத்தியமாக முன்னுக்கு வர உழைத்துத் தோற் பவன் கேலிக்கு ஆளாவதும், சாதுரியமாக முன்னுக்கு வரு

கிறவன் புகழ்ச்சிக்கும் செல்வாக்கிற்கும் ஆளாவது - இன்றுள்ள மோசமான முன்னுதாரணங்கள். சாதுரியமான குறுக்குவழி வெற்றி பலரை கவர்வதும், நிதானமான அற வழி வெற்றி பலரைக் கவராததும்தான் இன்றைய நடை முறை.

## மொழியறிவுத் துறை

மொழியில் பிழையாக எழுதுவதும், பிழையாகப் பேசு வதும் கேவலமான குற்றங்கள் என்று நாணி—நடுங்கிய தலை முறை மெல்ல மெல்ல மறைந்து வருகிறது. அதிகாரமும் செல்வாக்கும் உள்ளவர்கள் பிழையாக எழுதினுலும் புலமை உள்ளவர்கள் புகழும் ஒரு புதிய தலைமுறை மங்கலாக முன் னுல் தெரிகிறது. அச்சுக் கோப்பவர்களும் சரி, பிழை திருத்துபவர்களும் சரி, சில பிழைகளை மன்னிக்கவும், பெரிது படுத்தாமல் விட்டு விடவும் பழகிக் கொண்டு விட்டனர். ஒற்றைச் சிறு பிழையும்கூட வராமல் பாதுகாக்க வேண்டும் என்று எண்ணி முரண்டு பிடித்த (நல்ல முரண்டுதான்) பழைய தலைமுறை மறைந்து கொண்டு வருகிறது. பரி தாபமாக மறைந்து கொண்டு வருகிறது.

செய்யுள், வசனம், எதிலும் பிழைகளைப் பொருட்படுத் தாமல் விடுவது பெருந்தன்மைக் குணமாக எதிர்பார்க்கப் படுகிறது. அதே சமயத்தில் சாதி, கட்சி, கொள்கை, அடிப்படையில் வேறுபடுகிறவர்களின் சின்னஞ்சிறு பிழை கள் கூடப் பெரிதுபடுத்திக் காட்டப்படுகின்றன. எதிர்த் துக் கட்சி கட்டப்படுகின்றன. இப்படி ஒரு வளரும் தலை முறை. அப்படி ஒரு மறையும் தலைமுறை. 'மார்ஜினல் மிஸ்டேக்ஸ்' என்று ஓரளவு பிழைகளைக் கையாலாகாத் தனத்தோடு ஒப்புக் கொள்ளும் கோழைத் தனமானதொரு கூட்டம் எதிரே வந்து கொண்டிருக்கிறது. 'தவறுகள் குற்றங்கள் அல்ல' என்று மன்னிப்புக் கோரும் இன்னெரு வகை கூட்டமும் வளர்ந்து வருகிறது.

எழுத்துப் பிழைகளே தென்படாத பரம்பரையைச் சேர்ந்த பிடிவாதமான ஆங்கில நாளிதழ்கள் சிலவற்றில்கூட

இப்போதெல்லாம் வார்த்தைப்பிழைகளேதென்படுகின்றன. கொட்டை கொட்டையான வார்த்தைகளோடு கூடிய தலைப்புக்களில் பிழை தெரிகிறது. பிழைகளைக் காணச் சகியாத தலைமுறை மெல்ல மெல்ல மறைந்துவிட்டது என்பதையே இது காட்டுகிறதோ?

பேச்சில் உச்சரிப்புக் குறைகளை சுலபமாக மன்னிக்கிறோம். ஏனெனில் உச்சரிப்பு எப்படி இருந்தாலும் அப்படி உச்சரிப்பவர்களின் தமிழ் பற்று அழுத்தமாக (அலுத்த மாக அல்ல) இருக்கிறதாம். மோசமான உச்சரிப்பை முதல் தரமான மொழிப்பற்றுக்காக மன்னித்தாக வேண்டும், இது வளரும் தலை முறை. அப்படி மன்னிக்காத முரண்டு மறையும் தலைமுறை. உண்மையாயிருப்பது மறையும் தலைமுறை. உண்மையாயிருப்பது போல் நடிப்பது எதிரே வரும் தலைமுறை என்று தெரிகிறது.

பாட்டு, நடிப்பு, வசனம், எல்லாம் தெரிந்த சகலகலா வல்லவர்கள் நடித்த தலைமுறை மறைந்து விட்டது. வசனம் பேசுவது மட்டுமேகூட நடிப்பு என்ற புதுத்தலை முறை தெரிகிறது. சிரமங்களை எல்லாம் ஒரே ஒருவன் இரு தோள்களில் ஏற்ற தலைமுறை மறைந்து சிறு சிறு சிரமங்களினுலேயே பெரும் பிரதாபங்கள் பெறும் தலைமுறை வளர்கிறது. பத்திரிக்கையாளர்கள், அரசியல்வாதிகள், தொழில் நுட்பத் துறையினர் எல்லாப் பிரிவிலும் பழைய திட சித்தமும், உழைக்கும் திறனும், நிதானமும், பிடிவாதமும் உள்ள ஒரு தலைமுறை மறைந்து அவை எல்லாம உள்ளதுபோல நடிக்கும் பலவீனமான ஒரு கூட்டம் நம்மைச் சுற்றி வளர்வதைப் பார்க்கிறோம். 'பக்கா'வாக உழைக்கும் அந்தப் பழைய தலைமுறை மறையக் கூடாதே- கடோத்கஜனையும், கிங்கரனையும் போல் மனித சக்தி *(Man Power)* அதிகமுள்ள அந்தத் தலைமுறை போய்விடக் கூடாதே என்று நமக்குக் கவலையாகவும் பயமாகவும் இருக்கிறது. ஆனுல் நம் கண் காண அது மறைவது தெரியவும் செய்கிறது. வேறென்று வளர்வதும் தெரிகிறது. புதுமையை வெறுப்பதால்தான் இந்தக் கவலை

யும், பயமும் என்று நினைக்கக்கூடாது. புதுமையை நாம் ஆதரிக்கிறோம். ஆனால் அந்தப் புதுமை போலியாகவும், பழைய நல்முரண்டு அற்றதாகவும் மட்டுமே இருக்க வேண் டுமா? என்பதுதான் கேள்வி. இந்தக்கேள்வி அர்த்தமுள்ளது.

மெல்ல மெல்ல மறையும் பிடிவாதமான பழைய தலை முறையின் கடைசி மனிதன்கூட வேகமாகவும், பரபரப்பாக வும் எழுந்து கால் தடுக்க முன்னால் ஓடி வருகிற இந்தச் சோனியான—உழைக்கும் சக்தியற்ற வளரும் தலைமுறையின் ஆயிரக்கணக்கான மனிதர்களை எத்தனையோ காரணங்களுக் காக நிறைய மன்னிக்க வேண்டியதாகத்தான் இருக்கும்.

# நயம்பட உரை!

பாரதியின் காலத்துக்குப் பின் படிப்படியாகத் தமிழில் ஒரு புதிய சக்தி பிறந்திருக்கிறது. 'வசன நடையின் எளிமை அமைந்த கவிதையும், கவிதை நடையின் மெருகும் நளின மும் வாய்ந்த வசனமும் பாரதி யுகத்தின் விளைவாக (Impact) நமக்குக் கிடைத்திருக்கின்றன'—என்பதை மேடைச் சொற் பொழிவுகளிலும், இலக்கிய விமரிசனக் கட்டுரைகளிலும் திரும்பத் திரும்பச் சொல்லி வருகிறேன் நான்.

'சக்தி பிறக்குது மூச்சினிலே' என்று வேறொரு தொடர் பில் பாரதி பாடியதைத் தமிழ் நடையில் விளைந்துள்ள மாறு தலோடு இணைத்துப் பார்க்கிறேன் நான். இந்தத் தலை முறையில் எழுத்திலும், பேச்சிலுமாக தமிழில் ஒரு புதிய சக்தி அல்லது புதிய வேகம் பிறந்திருக்கிறது. நேர்படப் பேசு, நயம்பட உரை என்பவை பாரதியின் புதிய ஆத்திசூடி யில் இரண்டு தொடர்கள்.

சுற்றி வளைக்காமல் நேர்படப் பேசும் தமிழ் நடை இன்று உருவாகியிருக்கிறது. நயம்பட உரைக்கும் தமிழ் நடையும் வளர்ந்திருக்கிறது. பழமையின் மந்த கதியை மாற்றுகிற சில முயற்சிகள் வெற்றி பெற்றுள்ளன. மந்த

கதியை மாற்றுவதாகச் சொல்லிக் கொண்டு தலைதெறிக்கிற வேகத்தில் ஓடுகிற ஓட்டங்கள் சில தோல்வியடைந்தும் இருக்கின்றன. கமா, புல்ஸ்டாப், ஸெமிகோலன், கோடு, புள்ளிகள் போன்றவற்றைக் கொண்டும் அவைகளைப் பழைய இலக்கணச் சூத்திர விதிகளாகப் பெருத தமிழில் புதுமைகளையும், பொருட் பாகுபாடுகளையும் இன்று விளைவிக்கிறோம். சொற் சிக்கனத்துக்கும், வாக்கியக் கட்டுக்கோப்பிற்கும், இந்தக் குறியீடுகள் (Punctuation) பெரிதும் உதவுகின்றன. ஆனல் பழைய தமிழில் (ஏடுகளில் எழுதி வந்த காலத்தில்) வாக்கியம் முடிவதை அல்லது முடியாததைப் பொருளுணர்விலிருந்துதான் கண்டுபிடிக்க முடியும். ஏடுகளில் எழுத்துக்களுக்கு மேற்புள்ளிகள் கூட இடப் பட்டிராது. அச்சுக் கலையின் பாதிப்பினுலும், மேற்கத்திய தொடர்பினுலும், தமிழ் இந்தப் புதிய பயன்களை எல்லாம் பெற்றிருக்கிறது. இந்தப் புதிய பயன்களை எல்லாம் எப்படி நாம் ஏற்றுப் பயனடைந்திருக்கிறோமோ அதே போல் பயனும் அழகும் தருகிற பழைய இலக்கண அம்சங்களையும் விட்டுவிடக் கூடாது.

'புத்தகத்தை எடுத்தான்' என்ற வாக்கியத்தில் புத்தகம்—ஐ—எடுத்தான் என்ற மூன்று சொற்கள் இணைந்து சேரும்போது புத்தகத்திற்கும் 'ஐ'க்கும் நடுவில் 'அத்து' என்று ஒரு சாரியைச் சொல் பிறந்து 'புத்தகத்தை' என்று ஆகிவிடுகிறது. இதுதான் வழக்கம். அப்புறம் இதுவே இலக்கண விதியாகவும் நேரப்பட்டுவிட்டது. இப்போது சிலர் தமிழைச் சொற் சிக்கனத்தோடும் எழுத்துச் சிக்கனத்தோடும் எழுதுவதாக நினைத்துக் கொண்டு,

'புத்தகத்தை எடுத்தான்' என்பதை 'புத்தகம்மை எடுத்தான்' என்று எழுதுவதைப் பார்க்கிறேன். இதன்படி எழுதுவதானல், கீழ்க்கண்டபடி எல்லாமே குழப்பமாகும்.

| சரியான பிரயோகம் | தவருன பிரயோகம் |
|---|---|
| படம் பார்த்தான் | |
| அல்லது | படம்மைப் பார்த்தான் |
| படத்தைப் பார்த்தான் | |

| | |
|---|---|
| தீபம் ஏற்றினன்<br>அல்லது<br>தீபத்தை ஏற்றினன் | தீபம்மை ஏற்றினன் |
| கோபத்தால் வந்த வினை | கோபம்மால் வந்த வினை |

இன்னும் சிலர் சொற்சிக்கனத்தைக் கடைப்பிடிப்பதாகக் கூறிக் கொண்டு — பொருள் வேற்றுமை அல்லது அர்த்தபாவத்தைத் தெளிவாக உணர்த்தும் இடைச் சொற்களை நீக்கிவிட்டு எழுதுகின்றனர். அதனாலும் வாக்கியங்கள் குழப்பம் அடையும்.

| சரியான பிரயோகம் | தவருன பிரயோகம் |
|---|---|
| செருப்பைக் கழற்றிவிட்டுச் சாப்பிடப் போனுன் | செருப்பைக் கழற்றிச் சாப்பிடப் போனுன் |
| போகும்போது சொல்லிக் கொண்டு போனுன் | போகும்போது சொல்லிப் போனுன் |

இவற்றில் செருப்பையே கழற்றிச் சாப்பிட்டது போலவும், எதையோ சொல்லிவிட்டுப் போனதுபோலவும் (விடை பெற்றுச் சென்றதைக் குறிக்காமல்) பொருட் குழப்பங்கள் நேர்ந்துள்ளன. இன்னும் சிலர் அறந்தாங்கி என்பது அறந்தை என்றும், உறையூர் என்பது உறந்தை என்றும் மருவி வழங்குவதுபோல் 'மாயவரம்' என்பதை 'மாயை' என்றும், பூவிருந்தவல்லி, பூங்குடி, பூவற்றகுடி, பூவூர் ஆகிய பல பெயர்களை ஒரு சீராகப் 'பூவை' என்றும் வலிந்து முயன்று மருவச் செய்கிருர்கள். முன்னேர் வழங்கிவிட்ட மருவுதல் மொழிகளை அப்படியே அங்கீகரித்துக் கொள்வதற்கு இலக்கணம் அநுமதி அளித்திருக்கிறதே ஒழியப் புதிதாகக் கிடைக்கும் ஒவ்வொரு பெயரையும் அப்படி ஆக்கச் சொல்லி எந்த இலக்கணமும் வேண்டியதாக எனக்குத் தெரியவில்லை. 'மாயை' என்ருல் மாயவரத்தை நினைப்பதா அல்லது 'மாயை' என்ற வேதாந்த மொழியை நினைப்பதா?' "பாவூர்' என்பதைப் 'பாவை' என்ருக்குவதும் இப்படித்தான். பொருட் குழப்பத்தையும், சொல் மயக்கத்தையும் பிறழ்ச்சியான பிரயோகத்தையும் கூடியவரை தவிர்க்க வேண்டும், தமிழ் மொழிக்கு நாம் செய்யும் தொண்டுகளில் அது தலையாயது.

